

மலர் - 4 | ஹிஜ்ரீ 1362ளு ரபீயுல் ஆகிர் | கி.பி. 1943ளு ஏப்ரல்மீ | இ. - 6

## விஷய அட்டவணை



“நூருல் இஸ்லாம் ஆபீஸ்,”

65, பிராட்வே, ஜார்ஜ் டவுன், மதராஸ்.



بسم الله الرحمن الرحيم
نحمده ونصلي على رسوله الكريم

# நூருல் இஸ்லாம்

(ஓர் உயரிய செந்தமிழ் மாசிகை)

# NOOR-UL-ISLAM

(AN EXCELLENT TAMIL MONTHLY)

ஆசிரியர் : A. N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவி)

மலர் - 4 | ஹிஜ்ரீ 1362ஹு ரபீயுல் ஆகிர் / கி.பி. 1943ஹு ஏப்ரல்மீ | இ - 6

## கடவுள் புகழ்ச்சி

### HAMD—PRAISE OF GOD

"உலகத்தார்களுக்கு அச்சுறுத்துபவராய் அமைவதற்காகத் தனது அடியார் பால் புர்கானை (குர்ஆன் ஷரீபை) இறக்கிவைத்த (அல்லாஹ்வாகிய) அவன் கண்ணியம் மிக்கவனாயிருக்கிறான்;" (புர்கான், 25:)

"(அல்லாஹ்வாகிய) அவன் நாடுவானாயின் சிறந்ததை (சுகத்தை) உங்களுக்களிப்பான். கீழே அருவிகள் ஓடிக்கொண்டிருக்கும் உத்தியான வனங்கள் அதில் (சுவர்க்கத்தில்) உள. இன்னும் உமக்காக மாளிகைகளையும் ஆக்கித் தருவான். (இத்தகையோன்) கண்ணிய மிக்கவனாவான்." (புர்கான், 25:)

"வானத்தில் கிரஹங்களைச் செய்தவனும் அதிலே விளக்கையும் ஒளிவீசும் சந்திரனையும் ஆக்கிவைத்தவனுமான அவன் (ஆண்டவன்) கண்ணிய மிக்கவனாவான்." (புர்கான், 25:)

"(நபியே!) சொல்வீராக:—சர்வ புகழ்ச்சியும் (ஏக நாயனாய் விளங்கும்) அல்லாஹ்வுக்கே உரித்தாகும். மேலும் அவன் தேர்ந்தெடுத்தவர்களான அவனுடைய அடியார்கள் மீது சாந்தியும் சமாதானமும் உண்டு." (நம்ல், 27:)

"(நபியே!) சொல்வீராக:—சர்வ புகழ்ச்சிகளும் அல்லாஹ்வுக்கே உரித்தா யிருக்கின்றன. நீங்கள் அவனுடைய திருஷ்டாந்த அத்தாட்சிகளை அறிந்து கொள்ளுகின்றவர்களாய்ச் சமைவதற்காகத் தனது திருஷ்டாந்தங்களை உங்களுக்குச் சீக்கிரத்தில் (அல்லாஹ்) எடுத்துக் காட்டுவான். எனவே, நீங்கள் புரியும் கிரியைகளைவிட்டும், உமது இரட்சகன் மறதியுள்ளவனாயில்லை." (நம்ல், 27:)

"ஆண்டவன் அவனாகவே இருக்கிறான். வணக்கத்துக்குரியவனவனைத்தவிர (வேறு) ஒருவருமில்லை. ஆதியிலும் அந்தத்திலும் காணப்படும் சர்வ புகழ்ச்சிகளும் அவனுக்குரியவைகளாகவே இருக்கின்றன. (முடிவான) தீர்மானத் தீர்ப்பானது அவனுக்குரியதாகவே இருக்கிறது. மேலும் (நீங்களெல்லாம் மரணமடைந்தபின்) அவன்பாலே திருப்பி அழைக்கப்படுவீர்கள்." (கஸஸ்; 28:)

"நீங்கள் மாலைநேரத்திலிருக்கும்போதும், நீவிர் விடியற் காலையிலிருக்கும் போதும்

அல்லாஹ்வையே தூய்மைப் படுத்தவேண்டும். (காலையிலும் மாலையிலும் மற்றும் இதர நேரத்திலும் எத்தகைய சந்தர்ப்பத்திலும், எப்பொழுதுமே ஆண்டவன் ஒருவனையே நீங்கள் துதிக்கவும் வணங்கவும் சிரஞ்சாய்க்கவும் வேண்டியவர்களா யிருக்கின்றீர்கள்.") (ரூம், 38:)

"வானங்களிலும் பூமியிலும் முன்னிரவிலும் நீங்கள் அதிகாலையிலிருக்கும்போதும் எல்லாப் புகழ்ச்சியும் அவனுக்குரித்தாகவே இருக்கின்றன. (எனவே, வானத்திலாயினும் பூமியிலாயினும் எங்கிருப்பினும் எவராயிருப்பினும் எல்லாப் புகழ்ச்சியும் புகழும் உண்மைத் தோத்திரமும் ஏக ஆண்டவனும் அல்லாஹ்வுக் குரித்தாகவே இருக்கின்றனவென இந்த ஆயத்து எடுத்துக் காட்டுகின்றது.") (ரூம், 38:)

"வானங்களிலுண்டானவைகளும் பூமியிலுண்டானவைகளும் அவனுக் குரியவைகளாகவே இருக்கின்ற அல்லாஹ்வுக்கே சர்வ புகழ்ச்சிகளும் உரித்தாகும். இறுதி நாளிலும் புகழ் என்பது அவனுக்குரியதாகவே இருக்கிறது. அவன் பூரண ஞானியாய், நுண்ணறிவுடையோனா யிருக்கிறான்." (ஸபா, 34:)

"சர்வ புகழ்ச்சியும் அல்லாஹ்வுக்கே உரித்தாகும். (அவன்) வானங்களையும் பூமியையும் புதிதாய்ச் சிருஷ்டித்தவன். வானவர்களைத் தூதர்களாகவும் இரண்டிரண்டு மும்மூன்று நந்நான்கு சிறகுகளை உடையவர்களாகவும் ஏற்பாடு செய்தவன். சிருஷ்டியுள் தான் நாடியதை அதிகப்படுத்தக் கூடிய வன்மை உடையவன். நிச்சயமாகவே அல்லாஹ் சர்வ வஸ்துக்களின்மீதும் திராணி உடையவனாயிருக்கிறான்." (பாதிர், 35:)

"நம்மை விட்டும் கவலைகளையெல்லாம் போக்கிவிட்ட அவ் அல்லாஹ்வுக்கே சர்வ புகழ்ச்சியும் உரித்தாகும்." (பாதிர், 35:)

"சர்வ வஸ்துக்களின் அதிகாரங்களும் அவன் வயமே இருக்கின்ற அல்லாஹ் மகா தூய்மையானவன். (எல்லாவற்றிற்கும்) பிறகு அவன்பாலே நீவிர் திருப்பியழைக்கப் படுவீர்கள் (என்பது உங்கள் ஞாபகத்திலிருக்கட்டும்.)" (யாசீன், 36:)




"நூருல் இஸ்லாம்"

ஜீவிய சந்தா ரூ. 100—0—0 | இந்தியா, ஸிலோன் நாடுகளுக்கு ரூ. 3—0—0
போஷக சந்தா ரூ. 25—0—0 | மாதிரிப் பிரதி (தபால் செலவுடன்) 0—5—0

விளம்பர விகிதம்: 1 பக்கத்துக்கு 1 மாதம் மட்டும் ரூபா 30
½ " " ரூபா 15





# புத்தி வருமா? Will sense Emanate?

இப்போது நடைபெறும் போரின் காரணமாக இந்திய மக்கள் எவ்வளவோ தொல்லைகளுக்கு உள்ளாகிக் கிடக்கின்றார்கள். வறுமை பல இடங்களில் தாண்டவமாடுகிறது. பண்டங்களின் அகவிலை, சிலவிடங்களில் பொருள்கள் கிடைக்காமை போன்றவற்றால் மக்கள் படுந்துயர் சொல்லத்தரமன்று. இப்போதைய ஸர்க்கார் இவற்றை ஒருவாறு சமாளித்து மக்கள் தொல்லையை அகற்ற முயல்கிறதெனினும் நம் சொந்த ஸர்க்கார் ஏற்பட்டுவிட்டால், ஆட்சி அதிகாரம் நம்மவர்கைக்கு மாற்றப்பட்டால், இந்நெருக்கடி மிகுந்த காலத்தில் கூட நம் மக்களின் தொல்லை பல வழிகளில் குறையும் என்ற நம்பிக்கை நம்முள் பலருக்கு ஏற்பட்டிருக்கிறது.

ஆம், உண்மைதான். அந்தந்த நாட்டை அவ்வந்நாட்டு மக்கள் ஆண்டால்தான் மக்களுக்குரிய நலன்கள் யாவும் சரிவர ஏற்படும். இதை உணர்ந்தேதான் காங்கிரஸ் இந்த நாட்டிற்குச் சுய ஆட்சி வேண்டுமென்று கூறுவதை எவரும் ஆட்சேபிப்பதில்லை. முஸ்லிம் லீகும் இதனையே கூறுகிறது. ஆனால் சுய ஆட்சி கேட்பதில் எத்தகைய சுய ஆட்சி என்பதில் தான் வேற்றுமை இருக்கிறது.

காங்கிரஸ் கேட்கும் சுய ஆட்சி உரிமை ஒரு குறிப்பிட்ட சமூகத்தார் மட்டும் நலன் அடைவதற் குரியதாயிருக்கிறது. அதனுடன் கேட்கின்ற முறையும் ஒழுங்காயில்லை. முஸ்லிம் லீக் கேட்கும் சுய ஆட்சி உரிமையோ, முஸ்லிம்களுக்கு மட்டுமேயன்றி, இந்நாட்டைச் சேர்ந்த எல்லா இனத்தவரும் நலன் அடையும் முறையில் அமைந்ததாயிருக்கிறது. கேட்கும் முறையும் பிறஎவரையும் துன்புறுத்துவதா யில்லை.

எனவேதான், பழுத்த காங்கிரஸ்காரரும் காந்திஜீயின் சம்பந்தியாருமாகிய சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியார்கூட, இப்போது, முஸ்லிம் லீக் கேட்கும் 'பாக்கிஸ்தான்' எனப்படும் சுயஆட்சி உரிமையை ஆதரித்துப்பேச முன்வந்துவிட்டனர்.

கடந்த சில காலமாகவே திரு. ஆசாரியார், பாக்கிஸ்தானை ஆதரித்து வருகிறார். சமீபத்தில் 12-ஆந் தேதியன்று பெங்களூரில் மைசூர் சமஸ்தான முஸ்லிம் லீக் தலைவர் ஜனுப் முஹம்மத்

# அரிமா நோக்கு Views Resume

## முதலைப் பிடிவாதமா ?

நம் நாட்டுக்குச் சுயஆட்சி உரிமை பெறப் பல நல்ல வழிகளிருக்க, அவற்றை விட்டுக் கோணல் வழிகளில் போகவே காந்தியாரின் புத்தி போதிக்கிறது போலும். முஸ்லிம் லீகுடன் சமரசம் செய்துகொண்டால் ஒரு விநாடியில் இந்திய மக்கள் ஒற்றுமை ஏற்பட்டுவிடும். இதன் பயனுய்ச் சுயஆட்சி உரிமை பெறுவது மிகச் சுலபமான காரியம். ஆனல் தும்பை விட்டு வாலைப் பிடிப்பவன் கதையாக, காந்திஜீ பட்டினி விரதப் பிடிவாதத்தை இப்போது ஓராயுதமாக உபயோகித்து பிரிட்டிஷாரை மிரட்டும் திருப்பணியில் இறங்கிவிட்டார். சாகும்வரை அவர் மீண்டும் பட்டினி விரதம் கிடக்கப் போவதாகவும், இதுபற்றி இந்திய ஸர்க்காருடன் கடிதப் போக்குவரத்து நடத்துவாரென்றும் ஒரு செய்தி தெரிகிறது. இது உண்மையாயின் இம்முதலைப் பிடிவாதம் போகிறவரையில், உண்மையான மார்க்கம் காந்திஜீயின் கண்களுக்குப் புலப்படப் போவதில்லை.

## உதைக்கும் காலுக்கு முத்தம்

அமிர்தசரஸில் 12-ஆம் தேதியன்று திரு. ஹெச். ஜே. கண்டேகார் தலைமையில் அகில இந்திய ஹரிஜன் மகாநாடு நடந்தது. அதில் பேசிய தலைவர், பாக்கிஸ்தான் கோரிக்கையைக் கண்டனம் செய்து இந்திய சுதந்திரத்திற்கு முஸ்லிம்களே பெருந் தடையினராக இருக்கின்றனர் எனப் பொருள்படப் பேசியிருக்கிறார். அதனுடன், தீண்டப்படாதார் யாவரும் இந்து மதத்தை விட்டகலக் கூடாதென்றும் தங்கள் மத, சமூக, அரசியல் நிலைமையுயர இந்து மதத்திலிருந்துகொண்டே பாடுபட வேண்டுமென்றும் கூறியிருக்கிறார். இவருடைய பிற்போக்கான புத்தியைக்கண்டு அனுதாபப்படுகிறோம். இந்துக்கள் இவர்களைத் தக்க சாஸ்திர ஆதாரங்களுடன் தீண்டப்படாதவர், பார்க்கத் தகாதவர் என்று உதைத்துத் தள்ளுகின்றனர். இந்த மக்கள் சாதி இந்து வசிக்கும் தெருவில் நடக்கவே கூடாது; செருப்புப் போடக்கூடாது; குடைபிடிக்கக்கூடாது; பெண்கள் மேலாடை தரிக்கக் கூடாது என்றெல்லாம் பெரிதும் கேவலப்படுத்தப் பட்டிருக்கின்றனர். இப்படி நடத்துவதற்கு இந்துக்களின் வேதசாஸ்திரங்களும் ஆதாரமாம். இப்படிப்பட்ட நிலையிலேயே இன்னும் இருந்துகொண்டு, அந்த எஜமானர்கள் காலையே முத்தமிட வேண்டுமென்னும் இவருக்கு, பாக்கிஸ்தானைப்பற்றி அறிய அறிவு எங்கிருக்கும்? எனவே, பாக்கிஸ்தானைப்பற்றியும், முஸ்லிம்களைப்பற்றியும் இவர் கூறியிருப்பவற்றைப் பைத்தியக்காரனின் உளறலுக்கு ஒப்பாகவே நாம் மதிக்கிறோம். படுகுழியில் விழுந்து கிடக்கும் ஒருவன் அதைவிட்டுத் தானும் எழ வழி பாராமல், பிறரையும் அதைவிட்டுக் கிளப்ப முயலாமல், படுகுழியினின்று தாங்களாகவே எழ முயல்பவரையும் தடுப்பதென்றால் அத்தகையவரை எவருக்குத்தான் ஒப்பிடுவது!

(227-ம் பக்கத் தொடர்)

ஷரீப் தலைமையில் ஜாமிஆ மஸ்ஜிதில் நடைபெற்ற மீலாதெ ஷரீப் கூட்டத்தில் திரு. ராஜகோபாலாசாரியார் பேசியபோது,

"பாக்கிஸ்தான் கோரிக்கையைநான் ஆதரிப்பதில் ஆச்சரியமோ விசேஷமோ ஒன்றுமில்லை. இதற்கெதிராக, இப்பிரச்னையில் ஒற்றுமை ஏற்பட்டுவிட்டால் உடனே இந்நாட்டு மக்களிடை ஒற்றுமை நிலவி அதன் பலனுகச் சுய ஆட்சி உரிமை கிடைத்துவிடும் என்று தோன்றும்பொழுது, இதற்கிணங்க மறுத்து ஒதுங்கி நின்று அதனல் தங்கள் சுய ஆட்சி உரிமை பெறும் நாளை இன்னும் தள்ளிப்போட்டு வருவதுதான் ஆச்சரியத்திற் கிடமான விஷயமாகும்........இதற்கிணங்கிவிட்டால் பிரிட்டிஷாரின் பிடிவாதம் மறைந்துவிடும். அவர்கள் இங்கேயே இருந்துகொண்டிருக்கவும் முடியாது. இந்தச் சிகிச்சை முறையைத்தான் நான் விரும்புகிறேன். காங்கிரஸ் இதனை எதிர்க்குமென நான் நம்பவில்லை. காங்கிரஸ்கூட இதைத்தான் விரும்புகிறது. ஆனல், நான் காங்கிரஸை நெருங்க அனுமதிக்கப்படவில்லை. இதில் மன ஒற்றுமை ஏற்பட்டுவிட்டால் பிரிட்டிஷ் ஸர்க்கார் மேற்கொண்டு எழுப்பக்கூடிய தொல்லைகளையெல்லாம் நம் ஒன்றுபட்ட சக்தியைக்கொண்டு சமாளித்துவிடலாம். நாம் ஒன்றுபட்டால்தான் எல்லாச் சங்கடங்களையும் சமாளிக்கலாம்; நம் நாட்டை நாமே ஆளலாம்."

என்று கூறியுள்ளார்.

திரு. ஆச்சாரியார் அவர்கள் கூறிய வார்த்தைகள் யாவும் உண்மை. அவர் பன்முறை நம் தலைவர் காயிதெ அஃலம் ஜனப் ஜின்னுஹ் அவர்களை நேரிற்கண்டு பேசியிருப்பதால் முஸ்லிம் லீகின் கோரிக்கை நியாயமானதே என்பதை உணர்ந்துகொண்டார். ஆனல் அவரைப்போன்று, அவர் கூறுவதைப்போன்று, காங்கிரசும் உண்மை உணர்ந்து மனம் மாறுதல் பெறுமா? இந்தப் புத்தி காங்கிரஸ் தலைவர்களுக்கு வருமா? அப்படிக் காங்கிரஸ்தலைவர்களுக்குப் புத்திவரும்நாளே நம் நாடு நலனடையும் பொன்னுளாகும்.



## நல்லெண்ணம் தகர்ந்துவிடும்

தென்னுப்பிரிக்க ஸர்க்கார் இந்தியரை இழிவுபடுத்தி, வெள்ளையர் உயர்ந்தவர்களென்றும் இந்தியர் தாழ்ந்தவர்களென்றும், வெள்ளையர் பெறும் உரிமைகள் இந்தியருக்கில்லையென்றும் வெள்ளையர் வசிக்குமிடங்கள், போகும் பாதைகள் ஆகியவற்றில் இந்தியர் நுழையவே கூடாதென்றும் கருதப்படும்படியான மசோதா ஒன்றைக் கொணர்கின்றனர். இதனல் தென்னுபிரிக்காவில் இந்தியரின் உரிமைகள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. இந்த மசோதாவைப்பற்றிய பூரா விவரங்களையும் 15-ஆம் தேதியன்று நெட்டால் இந்திய காங்கிரஸ் தூது கூட்டத்தினர் ஜனப் ஜின்னுஹ் அவர்களைச் சந்தித்து அவரிடம் சமர்ப்பித்தனர். அதுபற்றி ஜனப் ஜின்னுஹ் தம் அபிப்பிராயங் கூறுகையில், "இந்த மசோதாவை நான் மிகமிக வன்மையாகக் கண்டிக்கிறேன். தென்னுபிரிக்க சட்டசபையில் இந்த மசோதா நிறைவேற்றப்பட்டால், இந்தியருக்கும் தென்னுபிரிக்க மக்களுக்குமிடை பெரும் பிளவேற்பட இது வழி செய்ததாகும். அதனுடன் சாம்ராஜ்ய நாடுகளின் எதிர்கால ஒற்றுமையின் அஸ்திபாரத்தையே இந்த மசோதா அரித்து ஒழித்துவிடும். இந்த மசோதாவை நிறைவேற்றிச் சட்டமாக்கி விட்ட நாளைப்பற்றிப் பின்னல் பெரிதும் வருந்தி நிற்க நேரிடும். இந்த மசோதா நிறைவேற்றப்படுவது நீதி, நியாயம், ஒழுங்கு, நேர்மை, கண்ணியம் முதலியவை அனைத்திற்கும்நேர் முரணானது. தலைமுறை தலைமுறையாகத் தென்னுபிரிக்காவில் வாழ்ந்துவரும் நம் மக்களுக்கும் இந்தியாவின் கண்ணியத்திற்கும் இம் மசோதா பெரும் இழுக்கை உண்டு பண்ணுவதாகும். ஒரு கண்ணியமான அரசியல்வாதி, எதிர்காலப்போக்கை அறிந்து நடப்பவர் என்னும் முறையில் ஜெனரல் ஸ்மட்ஸ் இத்தகைய பெரிய தவற்றை இந்தியர்மீது சுமத்த இடமளிப்பார் என்றோ, இந்த நெருக்கடியான நிலைமையில் ஒரு பெரிய தொல்லையை உண்டுபண்ண இடமளிப்பார் என்றோ என்னல் நம்ப முடியவில்லை" என்று கூறினர்.

தென்னுப்பிரிக்காவில் வாழும் நம் இந்திய சோதரர்கள் விஷயத்தில் இந்திய ஸர்க்கார் உடனே தலையிட்டு ஆவன செய்வார்களா? அல்லது எருமைமீது மழைபெய்த கதை தானு? என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

## ஜின்னுஹ் லாஹூர் குடியேறுகிறாரா?

காயிதெ அஃலம் ஜனப் ஜின்னுஹ் அவர்கள் பம்பாயிலிருக்கும் தம் வாசஸ்தலத்தை விட்டு லாஹூரில் நிரந்தரமாகக் குடியேறி வசிக்கப்போகிறார் என்று ஒரு செய்தி பத்திரிகைகளில் வெளிவந்தது. இது வெறும் புரளியான விஷயம். ஜனப் ஜின்னுஹ் அவர்கள் லாஹூரில் வீடுகளும் நில புலன்களும் வாங்குகிறார் என்பது உண்மையான விஷயம்தான், இதனல் அவர் பம்பாயை விட்டு லாஹூருக்கே நிரந்தரமாகக் குடிபோகிறார் என்று கூறுவது வெறும் புரட்டான கூற்றேயாகும்.

## போர் நிலைமை

வடக்காபிரிக்காவில் ஜெர்மன் படைகள் திணறுகின்றன. பிரிட்டிஷ் படைகளும் அமெரிக்கப் படைகளும் தினம் ஒரு பிரதேசம் விகிதமாகக் கைப்பற்றி முன்னேறுகின்றன. ஆகவே, இப்போர் முனையில் வெற்றி நேச நாட்டினருக்கே.

ருஷியப் போர் முனையில் கடந்த வெயிற்காலத்தில் ஜெர்மானியர் முன்னேறிய அளவு வேகம் இப்போது காணப்படவில்லை. அங்கு ருஷியர் கையே வலுத்திருக்கிறது. குளிர் காலத்தில் ருஷியர்கள் எவ்விதத் தீவிரத்துடன் போர் புரிந்தார்களோ, அதே தீவிரத்துடனும், வீரத்துடனும் இக் கோடைகாலத்திலும் ருஷியர்கள் போர் புரிவதாய்த் தெரிகிறது. எனவே, ருஷியாவிலும் ஜெர்மானியர்கள் கை ஒடுங்கி வருகிறது.

பர்மாவில் இப்போது மழைக்கால மாதலால், பிரிட்டிஷ் படைகள் அங்கே முன்

னேறித் தாக்குவதை ஒரள நிறுத்திவைக்கலாம். அதேபோல மழைக்காலம் முடியும் வரை இந்தியாமீதும் ஜப்பானியர் தாக்குதல் இராதென்று தோன்றுகிறது.

சீனவில்போர் இன்னும் முடிந்தபாடில்லை. கடந்த 8 வருடங்களாக நடைபெறும் சீன-ஜப்பான் போர் இன்னும் நடந்துகொண்டு தான் வருகிறது.

புஸிபிக் பிரதேசத்தில் அமெரிக்கர் ஜப்பான் கடற்படைக்கும் விமானப் படைக்கும் அடிக்கடி தகுந்த சேதம் விளைவித்து வருவதாகத் தெரிகிறது.

ஆஸ்ட்ரேலியாவுக்கு வடக்கே, ஆரோ தீவில் ஜப்பானியர் 2 லக்ஷம் முதற்றர வீரர்களைக் கொண்ட படையையும் பெரிய விமானப் படையையும் கொண்டு வந்து வைத்திருப்பதாகவும் எந்த நிமிஷத்திலும் ஜப்பானியர் ஆஸ்ட்ரேலியா மீது பாயக் கூடுமென்றும் ஆஸ்ட்ரேலியக் காலாட் படைத் தலைவரான ஜெனரல் பிளேமி அறிவிக்கிறார்.

பொதுவாக இப்போரினால் இந்திய மக்கள் பலவகைகளில் பெருஞ் சங்கடங்களுக்குள்ளாகிக் கிடக்கின்றனர்.

## கார்டுகள் சுற்றுப் பிரயாணம்

பிஸ்மில்லாஹிற்றஹ்மானிற்றஹீம்.

மதீனாவிலிருந்து வந்த உத்தரவு:—

(1) யா அல்லாஹ் (2) யா முஹம்மது (3) யா றஹ்மான் (4) யா றஹீம்

இதே மாதிரி போஸ்டில் 7-முஸ்லிம்களுக்கு எழுதி அனுப்பிவைக்கவும். இதன் பலன் 5-தினத்தில் தெரியும். தவறினால் நஷ்டமுண்டாகும். நாயன் துணை.

இவ்வாறு ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குக் கார்டு தபால் பண்ணுகிறார். இது தபால் ஆபீசுக்கு லாபம் செய்துவைக்கும் வேலை. தபால் கார்டுகள் ஏராளமாக விற்பனையாவதற்காகச் செய்யும் தந்திரம். காகிதப் பஞ்சகாலத்தில் எந்த முஸ்லிமும் இவ்விதச் சூழ்ச்சிகளுக்கு ஆளாகிவிடக் கூடாதென்றும், நினைத்தபடியெல்லாம் காரண காரிய மொன்றுமில்லாமலே முஸ்லிம்களையெல்லாம் ஏமாற்றிக்கொண்டேயிருக்கலாம் என்று பிறர் எண்ணவண்ணமிருக்கும்படியும் எச்சரிக்கை செய்கிறோம்.



# இஸ்லாமும் ஒற்றுமையும் (Islam & Unity)

ஆலீஜனுப் ஸையத் முஹம்மத் பாஹிர் சாஹிப், பனைக்குளம்.

(முன் தொடர்)

நமது ரஸூலே அக்ரம் முஹம்மது (ஸல்) அவர்கள் இஸ்லாமிய சகோதரத்துவம் என்பது பற்றித் திருவாய் மலர்ந்தருளியுள்ள ஹதீதுகளில் ஒன்றைக் கவனியுங்கள்: "ஒரு முஸ்லிமுக்கு மற்றொரு முஸ்லிம் மீது ஆறு கடமைகளிருக்கின்றன: (1) அவனைச் சந்தித்தால் ஸலாம் சொல்ல வேண்டும்; (2) (உதவிக்காக அவன்) உங்களை அழைத்தால், அதற்கு உடன்படவேண்டும்; (3) உங்களிடம் ஆலோசனை கேட்டால் நல்ல புத்திமதிகளைப் புகல வேண்டும்; (4) தான் தும்மியவுடன் அல்ஹம்து லில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று அவன் நவின்றால் (நீங்கள் யர்ஹமக்கல்லாஹ் (ஆண்டவன் உம்மீது கிருபை செய்யட்டும்.) என்று (மறுமொழி) கூறவேண்டும். (5) அவனுக்கு நோயுண்டானால் நீங்கள் போய்ப் பார்த்து வாருங்கள். (6) அவன் இறந்து போனால் அவன் ஜனாஜாவோடு செல்லுங்கள்" என்பன வேயாம்.

"ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமைக் காணுமிடத்து ஸலாமுரைத்தல் வேண்டும். இன்றேல் மலக்கு (வானவர்) களின் சாபம் அவர் மீது உண்டாகும்" என்பது மார்க்க முறையீடு. ஸலாம் சொல்லும் விஷயத்தில் தற்கால முஸ்லிம் பெருமக்களிற் சிலர் அனுஷ்டிக்கும் பிற்போக்கான அலக்ஷியக் கொள்கையைக் கண்டு எவரும் ஆச்சரிய மடையாதிருக்க இயலாது. ஏனென்றால் ஸலாம் கூறுதல், (ஹிந்துக்கள் கள்ளக்கும்பிடு, நெடுங்கும்பிடு போடுதல் என்றுரைப்பது போல்) ஒருவருடைய சீமான்தனத்திற்கும், பதவிக்கும், கண்ணியத்திற்கும், தாக்ஷண்யத்திற்கும் பயந்து அடிபணிவதற் கொப்பாக ஆகி விட்டது ஒருபுறம்; ஷை கண்ணியமான மனிதர் வேறொருவருக்கு ஸலாம் சொல்வதால் தமது கௌரவத்திற்கு ஹானிவிளைந்துவிடுமோ என்று அஞ்சி ஸலாம் சொல்லாமலிருப்பது மற்றொருபுறம். இத்தகையோர் ஸலாம் சொல்வதன் பொருளை நன்கு உணராததாலும், காபிர் முஷ்ரிகீன்களின் சகவாசத்தாலும் மேற்கூறியவாறு அலக்ஷியம் பண்ணுகின்றனர். 'அஸ்ஸலாமு அலைக்கும்' என்றால், 'உங்களுக்கு இறைவன்பாலிருந்து சாந்தியுண்டாவதாக' என்பது தான் பொருள். இவ்வளவு அழகிய பிரார்த்தனை பொதிந்த ஒரு சொற்றொடரைப் பிரயோகித்துக் கொள்வதில் அலக்ஷியம் எதற்கு? வெட்க மெதற்கு?

"ஒருவர்க்கொருவர் பகைமை கொள்ளாதீர்கள்; ஒருவர்க்கொருவர் அன்பு செலுத்துவதை விட்டு விடாதீர்கள்; அல்லாஹ்வுடைய அடியார்களே! (ஒருவருக்கொருவர்) சகோதரராயிருங்கள்; மூன்று இரவுகளுக்கதிகமாகத் தன் சகோதரனை (முஸ்லிமை) வெறுத்திருப்பது ஒரு முஸ்லிமுக்கு ஹலால (ஆகுமானத)ல்ல" என்பது ஒரு நாயகவாக்கியம் ஆனால், நாம் என்ன செய்து கொண்டிருக்கின்றோம்? ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவதென்பது நாவளவிலே தான்; கல்பு (மனப்பூர்வ) அளவிலல்ல. "சகோதராயி"ருப்பதற்குப் பதிலாகப் பாகுபாடுகள், பிரிவினைகள், பிளவுகள் மிகுந்தவர்களாகவே இருக்கின்றோம்.

"...வெறுப்பது ஹலாலல்ல" என்பதற்கு எதிராக, சொந்தத் தாயாதிகளுக்குள்ளேயே அற்ப சொற்ப விஷயங்களுக்கெல்லாம் சச்சரவுகளும், பகைமைகளும் பெருகி, கோர்ட்களில் வியாஜ்யங்கள் நடத்துவதும், அதனால் இரு தரப்பினரும் பொருள் விரயஞ் செய்வதும், பல்லாண்டுகள் மட்டும் (ஜீவியம் முழுதுங்கூட) ஒருவர் முகம் அடுத்தவர் பாராமலும், ஒருவரோடொருவர் பேசாமலும், கொடுக்கல் வாங்கல் செய்யாமலும் சுபாசுபக் கருமங்களிற் கலந்துறவாடாமலும் இருந்து விடுகின்றனரென்றால், இவையாவும் மார்க்கத் துரோகமிழைத்து, பாவஞ் சம்பாதித்து, அல்லாஹ், ரஸூலுடைய பொருத்தங்களையுமிழந்து விடுவதற்கு வழி திறக்கும் செயல்களல்லவா?

"நீங்கள் ஒருவர்க்கொருவர் சண்டை போட்டுக்கொள்ள வேண்டாம் (அப்படியானால்) நீங்கள் நலிந்தவர்களாகி, உங்களது புகழும் (மங்கிப்) போய்விடும்" என்னும் நந்திருமறையின் அமுத உரைப்படியும், "எவன் ஒற்றுமையிலிருந்து தனியாகவிருக்கிறானே, அவன் நரகபதியை யெய்துவான். ஆதலால், நீங்கள் பெருங் கூட்டத்தைக் கடைப்பிடித்துக் கொள்ளுங்கள்" என்ற நம் நாயகம் (ஸல்) அவர்களின் பொன்னுரைப்படியும், "ஒன்று பட்டாலுண்டு வாழ்வே" என்ற பாரதியார் வாக்குப்படியும், நாம் யாவரும் ஒற்றுமை யென்னும் அவனின் கயிற்றைப் பற்றிப்பிடிக்க, எல்லாம் வல்ல அல்லாஹ் நல்லருள் பாலிப்பானாக ஆமீன்!

# பொறுமையின் பெருமை

## PRESTIGE OF PATIENCE

பெண்களுக்கே உரித்தான சிறந்த குணங்களுள் பொறுமையும் அடக்கமுமே சிறந்தவை எனலாம். அச்சம் மடம் நாணம் பயிர்ப்பென்னும் நான்கு சிறப்பொழுக்கங்களின் உயிர் நாடியாய் இலங்குவது அடக்கமும் பொறுமையுமேயாகும். 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்றார் தமிழ் நாட்டுப் பெரியாரான திருவள்ளுவர்.

அடக்கமான பெண்கள் எப்பொழுதும் கண்ணியமும் பெருமையும் உடையவர்களாகவே விளங்குவர். கணவன்மாருக்கோ, அடக்கம் மிகுந்த பெண்களிடத்துக் காதல் பெருகும்.

அடக்கமாயிருத்தல், பொறுமையாயிருத்தல் என்றால் அடிமைபோலிருத்தல் என்பது அர்த்தமன்று. எல்லாவற்றிற்கும் அடக்கமாயிருந்து விடுதலும் ஆபத்தாக முடிந்துவிடும். ஆனால் கடுகடுத்த மொழி புகலாமை, எதனையும் ஆய்ந்தோய்ந்து பாராமல் கூறாமை, எதைச் செய்யினும் தீரயோசியாமல் செய்யாமை முதலியவை பெண்மணிகளால் கவனிக்கப்பட வேண்டுபவை ஆகும்.

தாய்மார்கள் குழந்தைகளை அடக்கமாக இருக்குமாறு வளர்க்க வேண்டும். வளரும் போதே குழந்தைகளுக்குப் பொறுமையும் அடக்கமும் கற்பிக்கப்பட்டால்தான் அவர்கள் வளர்ந்த பிறகும் அக்குணங்கள் மிளிரும். அவற்றால் அவர்கள் நற்பெயர் பெறுவதுடன் பெற்றோருக்கும் புகழ் விளையும்.

அடக்கமாயிருக்கும் பெண்களையே புருஷன்மார்கள் மிகவும் விரும்புகிறார்கள். அத்தகைய பெண்கள் ஆலோசனையே கணவர்களுக்கு அதிகப் பயன் தருவதா யிருக்கின்றது.

அடக்கமில்லாப் பெண்கள் எவ்வளவு உத்தமிகளாயிருந்த போதிலும் பல வீண் அவதூறுகளுக்கும் பழிகளுக்கும் ஆளாகி விடுகிறார்கள். அவர்கள்மீது சுமத்தப்படும் வீண் பழிகளைப் பிறர் எளிதில் நம்பவும் இடம் ஏற்பட்டு விடுகிறது. எனவேதான் முக்கியமாகப் பெண் மக்கள் அடக்கத்தையும் பொறுமையையும் கடைப்பிடித்து நடந்துகொள்ள வேண்டியது அத்தியாவசியமா யிருக்கிறது.

குர்ஆனில் பெண்கள் கோஷா, பர்தா முறைகளை அனுசரிக்க வேண்டுமென்று கூறப்பட்டிருப்பது வெறும் உடைகளைக் கொண்டு உடலையும் முகத்தையும் மூடிக் கொள்வது மட்டுமன்று. உண்மையிலேயே பொறுமையும் அடக்கமும் உடையவர்களாய் நல்வழியினைப் பின்பற்றுபவர்களாய் உத்தமிகளாய் இருக்க வேண்டுமென்பதே ஆண்டவனுடைய கட்டளையாகும்.

பெண்கள் குடும்பங்களிலே விளக்காக இருக்க வேண்டியவர்கள். மனைவியாக உள்ள பெண்மணி அன்பென்னும் நெய் பெய்து ஆதரவெனும் திரியிட்டு இன்மொழி எனும் தூண்டுகோலால் தூண்டிவிட்டு இல்லத்தில் ஒளியைப் பரப்பவேண்டும். இது தான் நல்ல பெண்மணிகள் நடந்துகொள்ள வேண்டிய முறையாகும்.

---

### வங்காளத்தில் புதிய லீக் மந்திரி சபை

அபிப்ராயபேதங் காரணமாக, 28-3-43-ல் வங்கப் பிரதம மந்திரி மௌலவீ. ஏ. கே. பஜ்லுல்ஹக் தம் மந்திரி சபையைக் கலைத்து விட்டு, இன்னும் அதிக பலமுடையதொரு மந்திரி சபையை அமைக்கப் போவதாகக் கூறித் தம் ராஜிநாமாவைக் கவர்னரிடம் சமர்ப்பித்தார். கவர்னர் அதை ஏற்றுக் கொண்டார். பிற மந்திரிகளும் ராஜிநாமா சமர்ப்பித்து விட்டனர். எனவே, கவர்னர் 93-வது செக்ஷன்படி தாமே ஆட்சி நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டார்.

ஆனால் 13-4-43-ல் வங்க கவர்னர், காஜா ஸர் நஜீமுத்தீனை (மாஜி மந்திரி) அழைத்து மந்திரிசபை அமைக்குமாறு கேட்டுக் கொண்டார். இவர் தலைமையில் புதிய மந்திரி சபை ஏற்படும். இவர் சிறந்த முஸ்லீம் லீகினர் ஆவர்.



# ஹதீஸ் - நூன் முகம்

## HADIS—INTRODUCTION



(முன் தொடர்)

X

### ஹதீஸ் இலக்கியத்தின் சரித்திர கால வரலாற்றுச் சுருக்கம்.

ஹதீஸின் தொகுப்பாசிரியர்களுடைய இடையறாத முயற்சியையும் சலியாத உழைப்பையும் மதிப்பிடுவதற்கும், ஹதீஸ் இலக்கியத்தின் தோற்றம், வளர்ச்சி, பூரண அபிவிருத்தி ஆதியவற்றை நன்குணர்வதற்கும், ஹதீஸ்கள் திரட்டப்பட்டதையும், நூலுருவாகத் தொகுக்கப்பட்டதையும், தொகுப்பாசிரியர் நாமங்களையும், அவரது நூல்களையும் பற்றிச் சுருக்கமாக ஆராய்வது பயனளிக்கக் கூடும். அந்நூலாசிரியர் வைராக்கிய சித்தமும் விடாமுயற்சியும் படைத்தவர்களாய் உழைத்திராவிடின், நபிகள் திலகம்(ஸல்) அவர்கள் திருவாயினின்று சொரிந்த மாசற்ற மாணிக்கங்களையும் மரகத மணிகளையும் மானிடகோடிகள் இழந்திருப்பார்கள். ஹதீஸின் தொகுப்பாசிரியர்கள் முளைத்துச் செழித்து வளர்ந்தார்கள். ஆனால் பரிபூரண சகாப்தமானது பிரமாண நூல்கள் ஆறனையும் தொகுத்தோர் வாழ்ந்த காலமாகிய ஹிஜ்ரீ மூன்றும் நூற்றாண்டாகும். இச் சரித்திர காலம் ஆறு பருவங்களாகப் பிரிக்கப்படுதல் வசதியாயிருக்கும்.

#### (1) பெருமானார் காலம்

ஹதீஸானது, நபிகள் பிரான்(ஸல்) அவர்களது தோழர்களின் நெஞ்சகச் சிலாசாசனங்களிலும், முக்கியமானவை, எழுத்துச் சாசனங்களிலும் எவ்வாறு பதிவாகியிருந்தன என்பது பற்றி முன்னரே விவரிக்கப் பட்டிருக்கிறது. இவ்வாறிருப்பினும், ஹதீஸின் ஒழுங்கான தொகுதிகளான நூல்கள் இக்காலத்தில் இல்லை. இங்கும் அங்கும் சில முக்கியமான ஹதீஸ்கள் எழுதிவைக்கப் பட்டிருந்தன; ஆயினும் பெருமானார் அவர்கள் காலத்தில் எல்லா ஹதீஸ்களும் திரட்டி நூலுருவாகத் தொகுக்கப் படவில்லை. ஏனெனில் அப்பெருமானார், தோழர்கள் மத்தியில் உயிர்வாழ்ந்திருந்தமையால் அக்காலத்தில் அப்படிப்பட்ட நூல் வேண்டப்படவில்லை. அன்றியும் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் நிரியாணம் எய்தும் வரை விலையில்லா மாணிக்கங்களே போல் ஹதீஸ்களைப் பொழிந்து கொண்டிருந்தபடியால், அப்பெருமானாரது வாழ்நாட் காலத்திலேயே அவற்றைத் திரட்டிச் சேர்த்து முடித்தல் இயலாததாயிருந்தது. மேலும் இஸ்லாத்தை நசுக்கி யொழிக்க முனைந்து நின்ற பலமிக்க சத்துருக்களை எதிர்த்துத் தமது உயிரைக் காத்துக் கொள்ள வேண்டிய அபாயகரமான போராட்டத்தில் ஈடுபட்டிருந்த தோழர்களுக்கு, ஹதீஸைத் திரட்டும் முயற்சியை மேற்கொள்ள ஓய்வு காலம் கிட்டவுமில்லை. ஆதலினால், இக்காலத்தில், ஹதீஸ்கள் முக்கியமாகப் பாதுகாப்புமிக்க இருதயங்களிலும் சிதறுண்ட இதழ்களிலுமே தங்கி நின்றன. அவைகளை மனனஞ் செய்தவர்கள், பிரமாதமாக, அபூ ஹுறைறா(றலி) பள்ளி வாயிலின் ஒரு கோணத்தில் வசித்தவர்களும், தம்மை முற்றிலும் இறைவனுக்கே அர்ப்பணஞ் செய்து பெருமானார் அவர்களை அகலாதுறைந்தவர்களுமான சுப்பா (கூடத்தின்) தோழர்கள் என்னப்பட்டவருள் ஒருவராவர். அவர் பின்வருமாறு கூறியதாக அறிவிக்கப்பட்டுளது :— "உண்மை என்னவென்றால், மக்காவைத் துறந்தவர் (முஹாஜிரீன்) களான நமது சகோதரர்கள் கடைவீதியில் வியாபாரஞ் செய்தலில் ஈடுபட்டிருந்தமையாலும், உணவருந்தி விட்டு நான் நபிபெருமானாரோடு இருந்து வந்தபடியாலும், அவ்வாறு அவர்கள் ஆஜரில்லாக் காலத்தில் நான் ஆஜராயிருந்தமையாலும், அவர்கள் மறந்து விட்டவை எனது ஞாபகத்தில் இருந்தன; உதவி புரிந்தோர் (மதீனா வாசி) களான நமது சகோதரர்கள் தங்கள் புலங்களில் வேலை செய்து கொண்டிருந்தமையாலும், சுப்பா வாசிகளான ஏழைகளில் நான் ஓர் ஏழையாயிருந்தமையாலும் அவர்கள் மறந்துவிட்டதை நான் பத்திரப்படுத்தினேன்."[1] ஹஜ்றத் ஆயிஷா அவர்களுக்கும் அதிசயிக்கத் தக்க ஞாபக சக்தி இருந்தது; அவர்கள் நுணுகி ஆராய்ந்த பின்னரே ஹதீஸை ஒப்புக் கொள்வார்கள்.

---

1. புகாரீ, 34: 1.

## (2) ஹிஜ்ரீ 11-முதல் ஏறக்குறைய 100-ஆம் ஆண்டு வரை யுள்ள இரண்டாம் பருவம்.

இது நபி பிரான்(ஸல்) அவர்கள் பரகதி அடைந்தது முதல் சற்றேறக் குறைய ஹிஜ்ரீ முதலாம் நூற்றாண்டின் முடிவில் அவர்களுடைய தோழர்களிற் கடைசியானவர் மரணம் அடைந்ததுவரையுள்ள காலமாகும். அத்தோழர் ஹிஜ்ரீ 91-ஆம் ஆண்டிற் பரலோகம் அடைந்த அனஸ் இப்னு மாலிக் ஆவர். இது நேரிய வழிபற்றிய சீரிய கலீபாக்கள் நால்வரும், கீர்த்தி வாய்ந்த மற்றைத் தோழர்களும் வாழ்ந்த காலமாகும். இப்பருவத்தில் தோழர்கள் இஸ்லாமிய ஞானப் பேரொளியின் பந்தங்களோடும் நற்செய்தியோடும் நெடுந்தூரம் பரந்து சென்று, முஸ்லிம்களால் ஜெயிக்கப்பட்ட நாடுகளிற் கிட்டத்தட்ட எல்லாவற்றிலும் குடியேறி வசித்தார்கள். ஹதீஸ் முழுவதையும் ஒருவர் தம் வசம் வைத்திருக்கக் கூடிய முறையில் ஒரு நூலாவது தொகுதியாவது அப்பொழுது கிடைக்கவில்லை. ஒரு தோழர்பாற் சென்று அவரிடமிருந்து ஹதீஸைக் கேட்டறியும் ஒரே வழிதானிருந்தது. இவ்வாறாக ஒவ்வொரு தோழரும் குடியேறி வாழ்ந்த விடத்தில் அவரைச் சூழ்ந்து வெவ்வேறு கலா நிலயங்கள் எழுந்தன. நபி பெருமான்(ஸல்) அவர்கள் திருவாயினின்று உதிர்ந்த அரதனங்களைப் பொறுக்கிக் கொள்ளும் பொருட்டு, மாணவர்கள் இந்நிலயங்களுக்குச் சென்று குழுமத் தொடுத்தார்கள். எனவே, இந்நிலயங்கள் கல்வியறிவு பெறுதற்கும் ஹதீஸ்களின் பயிற்சிக்கும் உரிய பாடசாலைகளாகவும் கல்லூரிகளாகவு மிருந்தன. ஓரிடத்தில் வாழ்ந்த தோழர் ஒருவர் எல்லா ஹதீஸ்களையும் அறியாதவராக இருந்தமையால், உற்சாகம் மிக்க மாணவர் ஒரு நிலையத்தின் பயிற்சியோடு திருப்தி யடைந்தாரில்லை; ஹதீஸைக் கற்றுத் திரட்டுதற்கு அவர்கள் வெவ்வேறு தோழரிடத்தும் சென்றார்கள். இவ்வாறாக, இக்காரியம் ஒன்றனையே மேற்கொண்ட ஒரு பிரிவாரான வித்தியார்த்திகள் தோன்றி ஏராளமான ஹதீஸ்களைத் தமது மனப் பக்கங்களிற் பதிய வைத்தார்கள். ஒரே யொரு ஹதீஸின் ருஜுவைப் பெறுதற்கு ஜாபிர் இப்னு அப்துல்லாஹ்(றலி) மதீனாவிலிருந்து சீரியாவுக்கு யாத்திரை செய்தார் என்று அறிவிக்கப் பட்டுளது;[1] இஃது அக்காலத்தில் ஒரு மாசப் பிரயாணமாயிருந்தது. அகபா இப்னு ஆமிர்(றலி) நெடுந்தூரம் பிரயாணஞ் செய்தார். ஒரு தனித்த ஹதீஸைத் தேடித் தாம் இராப்பகலாக யாத்திரை செய்தல் வழக்க மென்று சைத் இப்னு முசையப் அறிவித்திருக்கிறார். மற்றொரு தோழர் ஒரு ஹதீஸின் பொருட்டாக மிஸ்ர் தேசத்திற்குச் சென்றார். அபுல் அலீய்யா, "நபி பிரான்(ஸல்) அவர்களின் ஹதீஸ் ஒன்றைக் கேழ்விப் பட்டோம். ஆனால் அதிற் சம்பந்தப்பட்ட தோழர்பால் நாங்களே சென்று அவரிடமிருந்து நேரடியாகச் செவியேற்கும் வரை நாங்கள் திருப்தி யடைய வில்லை" என்று கூறியிருக்கிறார்.[2] அபூதர்தா திமஷ்குப் பள்ளி வாயிலில் உட்கார்ந்திருந்த பொழுது, ஒரு மனிதர் அவரிடம் போந்து, ஒரு ஹதீஸைப் பற்றி வினவிய பொழுது, அவர் அறிவித்திருந்த அந்த ஹதீஸ் மெய்தானா என்று அறியும் பொருட்டே தாம் அங்குச் சென்றதாகக் கூறினார் என்று அபூ தாவூத் அறிவித்திருக்கிறார்.[3] அறிவைத் தேடி அடைவதிலும், அதனை மற்றையோர் அடையும்படி பரத்துவதிலும் அப்புதிய தலை முறையாருக் கிருந்த உற்சாகப் பெருக்கினால் அவர்கள் இத்தகைய நெடுந்தூரப் பிரயாணத்தை மேற் கொள்ளத் தயங்கவில்லை. எழுதப் படிக்க அறியாத ஓர் அறபி (நபி பிரான்), தமக்கு முன் எவரும் செய்ய இயலாதிருந்த பிரமாதமான சீர்திருத்தப் புரட்சியை அறேபியாவிற் புகுத்தி விட்ட உண்மைச் சம்பவமானது, அத்தலைமுறையாரின் உற்சாகம் மிகுந்தெழச் செய்தது. அறபிகளும் அவரல்லாதாரும் அல்லும் பகலும் அப்பெருமானாரைப் பற்றியே பிரஸ்தாபித்துக் கொண்டிருந்தார்கள். வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் மக்கள் யாவரும் அப்பெருமானாரின் அடியொற்றி நடக்கத் தொடுத்தமையால், அன்னார் ஜீவியம் பொது ஜனங்களுக்கு ஒரு முன் மாதிரியாயிற்று. இதனால் அம்மகானின் திருவாக்கியங்களைத் தேடிப் பெறுதல் வேண்டப் பட்டது.

பெருமானார் அவர்களின் நிரியாணத்திற்குப்பின், ஏராளமான வழக்குக்கள் தீர்மானத்திற்கு வந்தன. இத் தீர்ப்புக்களுக்காக, குர்ஆனோடு ஹதீஸும் தேவைப்பட்டது. விசாரணைக்கும் சாட்சியத்திற்கும் உறுதிப்படுத்தும் அத்தாட்சிக்கும் ஹதீஸே அடிப்படையான சட்டமாகக் கொள்ளப்பட்டது. ஹஜ்றத் அபூபக்ர்(றலி) அறிவித்த ஹதீஸுக்கு விரோத

1. பத்ஹுல்பாரீ, பக். 158.
2. பக். 159.
3. மௌலவீ முஹம்மத் அலீயின் The Religion of Islam, பக். 70



மாயிருந்த படியால், பாத்திமா(றலி) பிதக் சொத்தை அடைய முடியவில்லை. தலைவர்கள் குறைஷி வம்சத்தைச் சார்ந்தவர் என்று பெருமானார் அவர்கள் அறிவித் திருந்தமையால் அன்ஸார்களுக்குக் கிலாபத் பதவி கிடைக்க வில்லை. எனவே, இக்காலத்தில் ஹதீஸையும் அதன் அத்தாட்சியையும் சேகரித்தல் ஆரம்பமாயிற்று.

இப்னு கல்லிக்கான் இயற்றிய நூலின்படி, பின்வருவன இவ்வாரம்ப காலத்தின் ஹதீஹுத் திரட்டுக்கள் என நாம் காண்கிறோம்:– (அ) ஹிஜ்ரீ 40-ஆம் ஆண்டில் பரலோகமடைந்த ஹஜ்றத் அலீ(றலி) இயற்றிய அல்கதயா; (ஆ) பெருமானார் அவர்கள் தேகவியோகம் அடைந்த பின் சில வருடங்களுள் இப்னு அப்பாஸ்(றலி) எழுதிய மற்றொரு சிறிய நூல்; இவர் ஹிஜ்ரீ 68-ஆம் ஆண்டில் மரணமடைந்தார். ஹஜ்றத் அலீ, இப்னு அப்பாஸ் ஆகிய இருவரும் கசடறக் கற்ற பண்டிதராயிருந்தனர். ஆனால் இவர்கள் எழுதியவை ஒரு சில ஹதீஸ்களே அடங்கின சிறிய நூல்களே யாகும். இவை பிற்காலத்தில் ஹதீஸை முதன் முதல் ஒழுங்காய்த் தொகுத்த இப்னு ஷிஹாப் ஜுஹ்ரீயாலும் அபூபக்ர் ஹஜ்ம் என்பவராலும் விரித்தெழுதப்பட்டன. இவ்விருவரையும் ஹிஜ்ரீ 101-இல் காலஞ் சென்ற உமையா கலீபா உமர் இப்னு அப்துல் அஜீஜ், இக்காரியத்தில் ஈடுபடச் செய்தார். பின்னை யவர் (அபூபக்ர் ஹஜ்ம்) ஜர்(க்) கானீ என்னும் பெயருடைய ஒரு சிறிய நூல் இயற்றினார். ஸர் வில்லியம் மூயர் பின்வருமாறு கூறுகிறார்:– "முஹம்மதுக்கு ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்குப் பின்னர், கலீபா இரண்டாவது உமர், அக்காலத்தில் வழங்கின ஹதீஸ்கள் யாவற்றையும் ஒழுங்காய்த் திரட்டும்படி சுற்றுப் பத்திரங்கள் வாயிலாய் உத்தரவிட்டார். இவ்வாறு ஆரம்பித்த வேலை ஊக்கத்துடன் தொடர்ச்சியாய் நடத்தப் பட்டது."[1] அவர் (இரண்டாவது உமர்) அபூபக்ர் இப்னு ஹஜ்முக்கு எழுதியது வருமாறு:– "அறிஞர்கள் மறைந்து விடுவார்கள் என்றும், ஞானத்தை இழந்து விடுவோம் என்றும் நான் அஞ்சுகின்றமையால், நபிகள் திலகம் (ஸல்) அவர்களின் திருவாக்கியங்கள் எத்துணை கிடைக்கின்றன என்று பார்த்து, அவற்றை எழுதிவைக்க. மேலும் பெருமானார் அவர்கள் ஹதீஸைத் தவிர, வேறு எதனையும் ஒப்புக் கொள்ளற்க. மக்கள் அறிவைப் பகிரங்கப் படுத்தல் வேண்டும்."[2] முதலாம் நூற்றாண்டின் இறுதியில், ஹதீஸின் அறிவைப் பல்வேறு கலாநிலயங்களிலிருந்தும் பொது மக்கள் பெறத் தொடுத்தார்கள். இக்காலத்தில் வேறு ஹதீஸுத் தொகுதிகளில்லை. இனித் தாபிஈன்கள் காலம் ஆரம்பித்தது.

## (3) ஹிஜ்ரீ 101-முதல் 200 வரையுள்ள தாபிஈன்கள் காலம்

இது நபி பிரான்(ஸல்) அவர்களது தோழருக்குப் பின் சந்ததியார் காலமாகும். அவர்கள் ஹதீஸ் தொகுக்கும் பணியை அதிதீவிர உற்சாகத்துடன் மேற்கொண்டு பற்பல கலாநிலயப் பிரதேசங்களிலிருந்தும் அவற்றைத் திரட்டிச் சேர்ப்பதில் நேர்ந்த கஷ்டநஷ்டங்களைச் சிறிதும் பொருட் படுத்தவில்லை. இக்காலத்தில் ஹதீஸைத் திரட்டினோர் நாமங்களும் அவர் வசித்த தலங்களும் வருமாறு:– பக்தாதில் மஃமர் இப்னு றஷீத்; பஸராவிற் சைத் இப்னு அபீ உபாதாவும் ராபிஆபிந்த் சபீஹும்; பக்தாதில் இப்னு ஜரீஹ்; மக்காவில் அப்துல் மலிக்இப்னு ஜுறைஜ்; கூபாவில் சுபியான் இப்னு தௌரீ; ஸீரியாவில் வலீத் இப்னு முஸ்லிம்; ராஜவில் ஜரீர் இப்னு அப்துல் ஹமீத்; குராசானில் அப்துல்லாஹ் இப்னு முபாறக்; புஸ்தாத்தில் ஹாஷிம் இப்னு பஷீர்; கூபாவில் அபூபக்ர் இப்னு அபீ ஷைபா; மதீனாவில் சுப்யான் இப்னு உயைனா. இவர்கள் திரட்டிய எல்லா நூல்களும் விரிவானவை அன்று. இவை ஒவ்வொன்றும் தினசரி வாழ்க்கையைப் பற்றியவைகளாகவும் அந்தந்தப் பிரதேசத்தில் வழங்கின ஹதீஸ்கள் மட்டும் அடங்கியவைகளாகவும் இருந்தன. இவைகளுக்குப் பின்னர் இமாம் மாலிக் இப்னு அனஸ் உடைய முஅத்தா தொகுக்கப்பட்டது. இது ஒழுங்காய்த் திரட்டப் பட்டதும் வரிசைக்கிரமமாய்த் தொகுக்கப் பட்டதும் இக்காலத்தும் பொதுமக்களுக்குக் கிடைப்பதுமான முதல் நூலாகும். இவர் ஹதீஸைத் திரட்டி அதன் பிரகாரம் நடக்கும் கடமையை மேற் கொண்டவர்கள் அடங்கின அஹ்லெ ஹதீஸ் என்னும் ஒரு சங்கத்தை ஸ்தாபித்தார். இமாம் மாலிக் ஹிஜ்ரீ 95-இல் பிறந்து 179-இல் மதீனாவிற் காலஞ் சென்றார். இவர் எப்பொழுதும் ஒலுச் செய்து பக்தியோடு ஹதீஸ் ஓதிக்காட்டுவது வழக்கம். (இவரது நூலின் உர்து மொழிப் பிரதியொன்று

1. Life of Mahomet, நூன்முகம் XXX
2. புகாரீ 3: 34

ஹிஜ்ரீ 1261-இல் டெல்லியில் இயற்றப்பட்டுளது.) கீர்த்தி வாய்ந்த இமாம் அபூ ஹனீபாவும் மேற் கூறிய காலத்தினிடையே வாழ்ந்தவராவர்; கியாஸ் என்னும் அனுமானத் தீர்மானம் செய்யும் முறையை ஸ்தாபித்தவர் இவரே. அதாவது, சட்டப் பிரச்னைகளைப் பற்றிய இவரது தீர்மானங்கள் குர்ஆன், ஹதீஸ், இஜ்மாஃ (ஏகோபித்த முடிவு; இது மற்றோர் அதிகாரத்தில் விளக்கப்படும்) ஆதியவற்றை ஆதாரமாகக் கொண்டு அனுமானித்தலாற் செய்யப்பட்டன. இவரிடத்தில் ஹதீஸின் திரட்டு ஒன்றும் இருந்ததில்லை என்னலாம். ஆனால், இவர் குர்ஆனையும் ஹதீஸையும் நன்கு பயின்றிருந்ததோடு மிக்க தெய்வ பக்திவாய்ந்த புண்ணிய சீலராயிருந்தார். இரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலும் மூன்றாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் இமாம்கள் ஷாபிஈயும் அஹ்மத் இப்னு ஹன்பலும் தோன்றி வாழ்ந்தார்கள். சட்டப் பிரச்சினைகளை யொட்டி நால்வகைக் கருத்துக்கள் கொண்ட மத்ஹப்களின் இமாம்கள் நால்வர் தோன்றியிருப்பது, அனுமானத்திற்காக ஹதீஸ் தீவிரமாகவும் நுணுக்கமாகவும் கையாளப்பட்டது என்பதைக் காட்டுகிறது. இமாம் மாலிக்கின் பிரமாண நூலாகிய முஅத்தாவிற்குப் பின்னர், பின்வருவோர் ஹதீஸ் பற்றிய நூல்கள் இயற்றினார்கள். கூபாவில் ஜாயத் பக்காயீ (மரணம் ஹிஜ்ரீ 183); கூபாவில் இப்னு அயாஷ் (மரணம் ஹிஜ்ரீ 193); மக்காவில் சுப்யான் இப்னு உயைனு (மரணம் ஹிஜ்ரீ 198); பஸ்ராவில் ஸல்மான் பார்ஸீ (மரணம் ஹிஜ்ரீ 203).

## (4) தபஅ(த்) தாபிஈன்கள் காலம்

(அஃதாவது தோழர்களுக்குப் பின் சந்ததியாருக் கடுத்த சந்ததியார் காலம்; ஹிஜ்ரீ 200 முதல் 300 வரை). ஹதீஸுக் கலைப் பயிற்சியின் மிகச் சிறந்த காலம் இதுவே. பின் வரும் அதிகாரத்தில் விளக்கிக் கூறப்பட விருக்கிற தொகுப்பாசிரியரது நுட்பமான ஆராய்ச்சியாலும் உழைப்பினாலும் இக்காலத்தில் ஹதீஸுக் கலை செழித்தோங்கிற்று. ஆதார பூர்வமான ஹதீஸுத் திரட்டுக்களின் ஆசிரியர் அறுவரும் இக்காலத்திற்றான் தோன்றினார்கள். தொகுப்பாசிரியர், காலக்கிரமப்படி பின்வருபவராவர்:— (1) பக்தாதில் ஹதீஸ் தொகுத்தவர் வா(க்)கிதீ; இவர் ஹிஜ்ரீ 207-இல் மரணமடைந்தார். (2) இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல்; இவர் ஹிஜ்ரீ 164-இல் பிறந்து 241-இல் காலஞ் சென்றார். இவரது முஸ்னத் முக்கியமானது; இந்நூலில் ஹதீஸ்கள் விஷயப் பிரசாரமன்றி ஆரம்ப அறிவிப்பாளர் பெயரடியாகப் பகுக்கப்பட்டுள்ளது. (3) அபூநாபிஃ; இவர் ஹிஜ்ரீ 211-இல் பிறந்து எமன் தேசத்தில் வாழ்ந்தவர். (4) அப்துல்லாஹ் இப்னு ஹ(க்)கம்; இவர் ஹிஜ்ரீ 221-இல் பிறந்து பஸ்ராவில் இப்பணியில் ஈடுபட்டிருந்தார். (5) எஹ்யா இப்னு மாயூன்; இவர் ஹிஜ்ரீ 223-இல் பிறந்து மதீனாவில் இருந்து உழைத்தார். (6) அபூ முஹம்மத் அப்துல்லாஹ் தாரமீ; இந்நூலிற் பொதுவாக தாரமீ என்று குறிப்பிடப்படுகிற இவர், ஷாஹெ சுன்னத் என்னும் நூல் இயற்றினவர் ஆவர்; இவர் ஹிஜ்ரீ 181-இல் பிறந்து 255-இல் மரணமடைந்தார். மேற் கூறிய ஆசிரியரது தொகுதிகளுக்குப் பின்னரே ஸிஹாஹ் ஸித்தா என்று பொதுவாக அழைக்கப்படுகிற இக் காலப் பிரமாண நூல்களாகிய ஆறு ஹதீஸுத் தொகுதிகளும் தோன்றின. ஹதீஸுக் கலை சம்பந்தமான எல்லா நூல்களிலும் இவைகளே மிக்க நம்பிக்கைக் குரியவை ஆகும்; இவற்றின் ஆசிரியர் நாமங்கள் வருமாறு:— (1) முஹம்மத் இப்னு இஸ்மாயீல் புகாரீ; இவர் ஹிஜ்ரீ 194-இல் அவதரித்து 256-இல் உயிர்துறந்தார்; இவரது ஸஹீஹ் பிரமாணத் தன்மையில் குர்ஆன் ஷரீபுக்கு அடுத்த பதவி வகிப்பதாகும். (2) முஸ்லிம் இப்னு குஷைரீ இயற்றிய ஸஹீஹ் அடுத்தபடியாக முக்கியமான நூலாகும்; இவர் ஹிஜ்ரீ 204-இல் உதித்து 261-இல் காலஞ் சென்றார். (3) இப்னு மாஜா 'சுனன்' என்னும் நூலைத் தொகுத்தவர் ஆவர்; இவர் ஹிஜ்ரீ 209-இல் பிறந்து 273-இல் பரகதியடைந்தார். (4) அபூ தாவூத் 'சுனன்' இயற்றியவர் ஆவர்; இவர் ஹிஜ்ரீ 202-இல் ஜனித்து 275-இல் மாணித்தார். (5) அபூ ஈஸா திர்மதீ 'ஜாமிஃ' எழுதினவர் ஆவர்; இவர் ஹிஜ்ரீ 209-இல் பிறந்து 279-இல் மரணமடைந்தார். (6) அபூ அப்தர் ரஹ்மான் நஸயீ 'சுனன்' இயற்றியவர் ஆவர்; இவர் ஹிஜ்ரீ 214-இல் பிறந்து 303-இல் காலகதியடைந்தார்.

## (5) ஹிஜ்ரீ 300 முதல் 600 வரையுள்ள 5-ஆம் பருவம்

இக்காலத்தில் ஹதீஸ் பற்றிய நூல்கள் இயற்றினோர் பின் வருபவராவர் :—(1) அபுல் ஹஸன் அலீ தார்(க்) குத்னீ; இவர் இந்நூலில் தார்(க்) குத்னீ என்ற பெயராற் குறிப்பிடப்படுபவர்; இவர் இயற்றிய நூல் ஷுஅபுல் ஈமான். இவர் ஹிஜ்ரீ 305-இல் பிறந்து 385-இல்



சென்றார். (2) அஹ்மத் இப்னு ஹுஸைன்; இவர் ஹிஜ்ரீ 360-இல் பரகதி அடைந்தார். (3) இந்நூலில் பைஹ(க்)கீ என்று குறிப்பிடப்படுகிற அபூபக்ர் அஹ்மத் பைஹ(க்)கீ; இவர் ஹிஜ்ரீ 384-இல் பிறந்து 456-இல் மரணமடைந்தார். (4) நைஷாபூர் வாசியான பஃஹ்மானீ; இவர் ஹிஜ்ரீ 405-இல் உதித்தவர். (5) அபூ தல்ஹா; இவர் ஹிஜ்ரீ 447-இல் பிறந்தவர்.

ஹதீஸ் சம்பந்தமான இவ் வெல்லா நூல்களிலும் அறிவிப்பாளர் பரம்பரைத் தொடர் அடங்கியிருக்கிறது. சில காலத்திற்குப் பின்னர், மாணவர்களுக்கும் இப்பணியில் ஈடுபட்டிருந்த மற்றையோருக்கும் பரம்பரைத் தொடராகிய இஸ்னாத் இன்றியே ஹதீஸ்களைச் சுருக்கி எழுதுதல் வேண்டப் பட்டது. ஆதாரத்தைப் பற்றித் திருப்தி அடைந்திருக்குங்கால், படிப்பவர்கள் ஹதீஸ்களின் மூல வாக்கியங்களை மட்டுமே அறிய விரும்பினார்கள். இம்முயற்சியில் முஆவியாவின் புதல்வர் அபுல் ஹஸன் ரஜீன் என்பார் முதன் முதலாகத் தலையிட்டார்; இந்நூலில் ரஜீன் என்ற நாமத்தாற் குறிப்பிடப் படுகிற இவர் ஹிஜ்ரீ 250-ல் காலஞ் சென்றார். அப்பால் இப்னு அ(த்)தீர் என்பார் இத்தகைய நூல் ஒன்று இயற்ற முயன்றார். அவருக்குப்பின், ஷர்புத்தீன் என்பார், விஷயங்களை அட்சரக் கிரமமாய்த் தொகுத்துப் புதுக்கிய பதிப் பொன்றை இயற்றி அதற்குத் தஜ்ரீதுல் உஸுல் எனப் பெயரிட்டார்; இது மீண்டும் 1890-இல் இயற்றப்பட்ட தைஸீருல் உஸுல் என்னும் நூலில் புதுக்கி எழுதப்பட்டது. இந்நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு ஒன்று 1924-ல் மீர்ஜா அபுல் பஜ்ல் என்பாரால் இயற்றப்பட்டது; இக் கிரந்தத்தில் 1000 ஹதீஸ்கள் அடங்கியுள்ளன. அபுல் பர்ஜ் அப்தர் ரஹ்மான் ஜௌஜீயும் ஒரு நூல் இயற்றினர்; இவர் ஹிஜ்ரீ 517-இல் பிறந்து 597-இல் காலஞ் சென்றார். அறிவிப்பாளர் பரம்பரை இல்லாத நூல்களில் மிக முக்கியமானது ஹுஸைன் இப்னு மஸ்ஊத் பர்ரா இயற்றிய கித்தாபுல் மஸாபீஹ் ஆகும். இது மிகச் சிறந்த பதிப்பாகும்; இந்நூலாசிரியர் ஹிஜ்ரீ 516-ல் காலகதி அடைந்தார்; இவரது நூலே வலீயுத்தீன் அபூ அப்துல்லாஹ் முஹம்மத் என்பாரால் மேலும் விருத்தி செய்யப் பட்டு மிஷ்காத்துல் மஸாபீஹ் என்னும் பெயரால் நன்கறியப் பட்டதாயிருக்கிறது. இவரது நூலே, சிறிது வேறுபட்ட அதிகாரங்களோடும் உட்பிரிவுகளோடும் ஈண்டு மொழி பெயர்க்கப் படுகிறது. பின் வரும் வேறு சில சிறிய தொகுப்பாசிரியர்களும் வெவ்வேறு காலத்தில் இருந்திருக்கிறார்கள்:—

(1) அபூ எஹ்யா ஜகரிய்யா; (பிறப்பு ஹிஜ்ரீ 631; மரணம் 677).
(2) அபூ ஈஸா ஹ(க்)காரீ; (மரணம் ஹிஜ்ரீ 694)
(3) அஜீஜுத்தீன் கஸனீ; (மரணம் ஹிஜ்ரீ 767)
(4) அப்தர் ரவூப் மஸுயீ; (மரணம் ஹிஜ்ரீ 1031)
(5) அபூஅப்துல்லாஹ் நைஷாபூரீ.
(6) இப்னு ஹப்பான் ஜியாவுத்தீன் மக்தீஸி.
(7) ஜம்உல் ஜவாமிஃ இயற்றிய சுயூத்தி.

(தொடரும்)

# காக்ஸார் தலைவரின் வாழ்க்கை வரலாறு

## A SHORT BIOGRAPHY OF THE KAKSAR LEADER

(முஹம்மத் ஸர் பராஜ் கான், M. SC., LL. B., சாலாரே மந்துப், லாஹூர்)

(T. F. R. மௌலவீ மொழிபெயர்ப்பு)

அல்லாமாவின் அறிவாற்றலையும் பெருமைகளையும், இங்கிலாந்தின் உயர் வகுப்பு அறிஞர்கள், எங்ஙனம் கருதி வந்தார்கள் என்பதை அறிய, கீழ்க் குறிப்பிடப்படும் பத்திரிகைக் குறிப்புகளைப் பார்வை யிடுவீர்களாக. இவை அவ்வப்போது பிரசுரமானவைகளாகும் :—

"**ஸ்டார்**" என்ற லண்டன் தினசரிப் பத்திரிகை அல்லாமாவின் வெற்றியைச் சிலாகிக்கிறது :—"ஐந்து வருஷமாகிய சொற்ப காலத்தில், ஒருவர் நான்கு பரீக்ஷையில் தேர்ந்து பட்டம் பெறுவதென்பது அசாத்தியமான காரியமென்று கருதப்பட்டு வந்தது. ஆனால், இதையும் சாதித்துவிட்ட பெருமை இந்தியாவின் மகனான இனயத்துல்லா கானுக்குக் கிடைத்துளது. அவர் அசாத்தியத்தையும் சாத்தியமாக்கி விட்டார்."

"**டெய்லி கிரானிக்கள்**" என்ற மற்றொரு பெரும் பத்திரிகை எழுதுவதாவது :-"மெக்கானிக்கல் சைன்ஸின் டிரைபோஸ் பரீக்ஷையில் தேர்ந்தவர்களின் பெயர்கள், நேற்றுப் பிரசுரமானதைப் பார்வையிட்டோம். அதில் இனயத்துல்லாகான் பெற்றுள்ள வெற்றியைக் கண்டு நாம் பெரிதும் பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம். உலகத்து மக்கள் எல்லோரிலும் முதன்மையாய் நான்கு பலதிறப்பட்ட பரீக்ஷைகளில் ஒருமிக்க தேர்ச்சி பெற்றவர் இவர்தான்."

"**வெஸ்ட் மினிஸ்டர் கெஜெட்**" என்ற ராஜாங்கப் பத்திரிகை எழுதுவதாவது :—"சூக்ஷ்மமான புத்திசாலியான இந்திய மாணவர் இனயத்துல்லாகான் இன்று மற்றுமோர் பெரிய கௌரவத்தைப் பெற்றுக்கொண்டார். கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையில் படித்து உன்னத ஸ்தானமும் கீர்த்தியும் வகித்த அறிஞர்களில், இவர் மேலான ஸ்தானத்தில் இருக்க வேண்டியவராவார்."

"**கேம்பிரிட்ஜ் டெய்லி நியூஸ்**" என்ற பத்திரிகை, தனது சர்வ கலாசாலையின் பரீக்ஷை முடிவுகளைப் பிரசுரம் செய்துவிட்டு அதனுடன் எழுதுவதாவது:-"இன்று காலை, வெற்றி பெற்ற மாணவர்களுடைய மற்றொரு ஜாபிதா பிரசுரமாயிருக்கிறது. அதில், கிரைஸ்ட் காலேஜின் இனயத்துல்லாகான் பெற்றுள்ள வெற்றி பெரிதும் விசேஷமாய்க் குறிப்பிடத்தக்கதாகும். இனயத்துல்லாகான், நமது கேம்பிரிட்ஜில் படித்துத் தேர்ந்தவர்களுள் முதன்மையானவராய் விளங்குகிறார். உலக சமூகத்தினர்களிலும் இவரே முதன்மையானவர்; ஏனெனில், இவர் நான்கு பல்வேறு விதமான படிப்புகளில் மிகத் தீர்க்கமான தேர்ச்சியை அடைந்துள்ளார்."

இவ்வாறே, "டெய்லி டெலிகிராப்," "லண்டன் டைம்ஸ்" முதலிய பத்திரிகைகளும் அல்லாமாவின் சாமர்த்தியத்தைப்பற்றி விரிவாய் எழுதியிருக்கின்றன.

### இங்கிலாந்திலிருந்து திரும்புங்கால் கௌரவம்

இறுதியாக 1912-ம் வருஷம், அங்கு ஒரு பெரிய சமஸ்தானத்தின் மகாராஜா நம் அல்லாமா மஷ்ரிகீயைத் தமது இருப்பிடத்துக்கு அழைத்து, "தாங்கள் எமது சமஸ்தானத்தில் மந்திரி பதவியை ஏற்றுக் கொள்ளுங்கள். தங்களுக்கு மாதம் 10,000 ரூபாய் சம்பளம் தருகிறோம்" என்று கேட்டுக் கொண்டார். அல்லாமா அவர்கள், பொது நன்மைக்கே உழைக்க வேண்டுமென்ற அவா கொண்டிருந்ததால், அந்தப் பதவியை 'வேண்டாம்' என்று உதறித் தள்ளிவிட்டார்.

மேற்படி சம்பவத்திற்குப் பிறகு, அல்லாமா அவர்கள் தமது தாய் நாட்டுக்குத் திரும்ப வேண்டுமென்ற நாட்டங் கொண்டார்கள். அங்ஙனம் பிரயாணப் படுவதற்கு முன், 700 ரூபாய் மாதச் சம்பளத்தில் மற்றோர் உத்தியோகமும் அல்லாமாவின் சமுகத்தில் சமர்ப்பிக்கப்பட்டது. அவர் இதையும் மறுத்து விட்டார்.

அல்லாமா பம்பாய் வந்து சேர்ந்தார். சின்னாட்களுக்குப் பின்னர், எல்லைப்புற மாகாண கவர்னராயிருந்த ஸர்-ஜார்ஜ் எஸ் கிப்பல், பிஷாவரிலுள்ள இஸ்லாமியா காலேஜில் **வைஸ் பிரின்ஸிபால்** பதவியை வகிக்குமாறு அல்லாமாவைக் கேட்டுக்கொண்டார். இஸ்லாத்திற்காகப் பேரூழியம் புரிய வேண்டுமென்ற அபேக்ஷை அல்லாமாவுடைய உள்ளத்தில் அலைமோதிக் கொண்டிருந்ததால்,



அவர் அப்பதவியை ஏற்றுக்கொண்டு, எல்லைப்புறத்துக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கு அல்லாமா அவர்கள், 1916-ம் ஆண்டுமுதல் 1917-ம் ஆண்டுவரை பிரின்ஸிபால் பதவியில், தமது கடமையை நிறைவேற்றி வந்தார்; அந்தக் காலத்தில், இஸ்லாத்துடைய மேன்மைக்காக வேண்டி அளவற்ற சேவை செய்துள்ளார். உயிருக்கே ஆபத்து உண்டாக்கக்கூடிய பல எதிர்ப்புகளுக்கும் துணிந்திருந்து, இஸ்லாத்துடைய இலக்ஷியங்களைக் காப்பாற்றினார். பொதுவாக இஸ்லாமிய சமூகத்தை மேன்மைக்குக் கொண்டு வருவதற்காகக் கல்வித் துறையில் அரும்பாடு பட்டார். எல்லைப்புற அரசாங்கத்துக் கல்வி முறை எப்படிப்பட்டதென்பதை அறிந்தவர்கள் தாம் அல்லாமாவுடைய சேவைகளின் தன்மையை உணர முடியும்.

### இந்தியா சர்க்காரில் உதவி மந்திரி பதவி

1917-ம் ஆண்டில், இந்திய கவர்ன்மெண்டார் அல்லாமாமஷ்ரிகீயை, ஓராயிரம்ரூபாய் மாதச் சம்பளத்தில், சிம்லாவில் ஸர். ஜார்ஜ் ஆண்டர்ஸன் துரையுடைய பதவிக்குத் திடீரென்று அழைத்துக் கொண்டார்கள். அங்கு அல்லாமா அவர்கள், 1919-ம் ஆண்டு வரை "அண்டர் செக்ரட்டரி" பதவியில் அமர்ந்து தமது கடனை ஆற்றிவந்தார். இந்த மூன்று வருஷ காலமானது, அல்லாமாவுக்குப் பலவித படிப்பினைகளையும், விவேகத்தையும் அளித்தது. காரணம் என்னவெனில், அக்கால அதிகாரவர்க்கம் என்ற சக்கரம் தலைகீழாய்ச் சுழன்று கொண்டிருந்தது. சமூகத் துரோகிகளும் மதத்துவேஷிகளும் அதிகார வர்க்கத்துள் புகுந்து வியாபித்து, எங்கும் வஞ்சம், வஞ்சகம் என்ற இருளைப் படரச் செய்து அட்டூழியங்கள் புரிந்து வந்தார்கள். இவற்றையெல்லாம் நேருக்கு நேராய்க் கண்டறிந்த அல்லாமா மஷ்ரிகீ பெரிதும் மனம் வருந்திச் சஞ்சலமுற்றார்கள். இவற்றையெல்லாம், அவரால் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை.

அவ்வதிக்கிரமங்களை யெல்லாம் கண்டு வெறுப்புற்று, அல்லாமா அவர்கள், தமது நேரத்தை, சமூக, அரசியல் துறைகளில் மக்களுக்குச் சேவை செய்வதில் கருத்துக் கொண்டவரானார்; வெளிப்படையில் சந்தோஷமும் சுகமும் தருவதாய்க் காணப்படும் பொய்த்திரையை நீக்கி, சத்தியத்தை வெளிப்படுத்த பிரயத்தனப் பட்டார். இதனால் என்னென்ன கசப்புகளும் சங்கடங்களும் நேரிடும் என்பதையும் அல்லாமா அவர்கள் நன்குணர்ந்திருந்தார்கள்.

அங்ஙனமிருக்க, அல்லாமா மஷ்ரிகீ வகித்து வந்த உதவி மந்திரி உத்தியோக காலம் பூர்த்தி யடையும் தறுவாயில் இருந்தது. பஞ்சாப் கவர்னராய் வந்த ஸர் எட்வர்ட் மெக்லிகன் துரை, நம் அல்லாமா மஷ்ரிகீ அந்த மூன்று வருஷகாலம், எத்துணை அரிய முறையில் உத்தியோகம் புரிந்தார் என்பதைப் பற்றிப் பெரிதும் சிலாகித்து, இந்தியா மந்திரிக்கு எழுதியிருந்தார்: "இனயத்துல்லாகான், இந்திய அரசாங்கத்தில் மிக நுட்ப புத்தியுடையவராயும், விவேகம் மிகுந்தவராயும் விளங்குபவர்; தமது மந்திரிப் பதவியை அவர், எங்கள் எல்லோர்க்கும் திருப்தி தரும் விதத்தில் வகித்து வந்தார்" என்று அவர் புகழ்ந்திருந்தார். இதைக் கருதி, இந்தியா கவர்ன்மெண்ட்டார், ஓர் ஆயிரம் ரூபாய் மாதச் சம்பளத்தில், "இண்டியன் எஜுகேஷனல் சர்வீஸ்-ஐ. இ. எஸ்." என்ற சிறந்த உத்தியோகப் பதவியைச் சாசுவதமாய் வகிக்குமாறு கட்டளையிட்டு அல்லாமாவைப் பிஷாவருக்கு அனுப்பி வைத்தார். இந்த மாதிரியான உத்தியோகத்தில், எந்த இந்தியருக்கும், இவ்வளவு பெரிய சம்பளத்தை, இந்தியா சர்க்கார் எப்பொழுதும் கொடுத்ததேயில்லை.

அங்ஙனம் பதவி வகித்திருந்த காலத்திலேயே அல்லாமா அவர்கள், பிஷாவர் டிரெய்னிங் காலேஜ் பிரின்ஸிபால், கவர்ன்மெண்ட் ஹைஸ்கூல் பிரின்ஸிபால், இன்ஸ்பெக்டர் ஆப் ஸ்கூல்ஸ் முதலிய பதவிகளையும் வகித்துக் கொண்டு சேவை செய்து வந்தார். இவற்றுடன், அல்லாமா அவர்கள், பிரயாசை எடுத்துக் கொண்டு, எல்லைப்புற மாகாணத்து ஸர்க்கார் பள்ளிக் கூடங்களில், பிள்ளைகளுக்கு குர்ஆன் ஷரீப் கற்றுக்கொடுக்கத் தகுந்த ஏற்பாடும் செய்து வைத்தார். இதற்கு அரசாங்கத்தினர் எவ்வளவோ முட்டுக்கட்டையாய் இருந்துங் கூட, அல்லாமா தமது சேவையைச் சாதித்து, எல்லா ஹைஸ்கூல்களிலும் குர்ஆன் பாடம் நடைபெறும்படி செய்து வைத்தார்.

### 32-ம் வயதில் 'ஸர்' பட்டமும் மறுப்பும்

கி. பி. 1920-ஆண்டு, அதாவது ஸர். ஹாமில்டன் கிராண்ட் துரை, எல்லைப்புற மாகாணக் கவர்னராக இருந்த காலம்; அந்த மாகாணத்து ஆட்சி முறையினால் முஸ்லிம்கள் ஏராளமாய் **ஹிஜ்ரத் செய்து** காபுல் நகரத்துக்குக் குடியேறிக்கொண்டிருந்த காலம். அப்போது அங்கு ஒரு வியப்பான சம்பவமும் நிகழ்ந்தது. அது, அல்லாமா மஷ்ரி

கீயுடைய இஸ்லாமியப் பற்று, உயர்ந்த அந்தஸ்து, சமூகப்பற்று, பரோபகாரம் முதலிய அருங் குணங்களை வெளிப்படுத்த ஓர் உதாரணமாய் விளங்கியது. அதாவது, ஜனங்கள் ஹிஜ்ரத் செய்துகொண்டிருந்த காலத்தில், ஆங்கிலேயர்கள் மிகவும் பயந்துபோய் இருந்தார்கள். அவர்களுக்கு ஏற்பட்ட அச்சம் வேறெந்த வகையிலும் நிவர்த்தியாகக் கூடிய மார்க்கம் காணவில்லை. எனவே அரசாங்கத்தார், இந்தியாவின் அருந்தவப் புதல்வராகிய நம் அல்லாமா மஷ்ரிகீக்கு (இவர் ஓர் ஆண்டு கவர்னரோடு நெருங்கிப் பழகி உத்தியோகமும் வகித்திருந்ததால்) "**பொலிட்டிகல் செக்ரட்டெரி**" என்ற பெரிய பதவியை அளித்தார்கள். "இந்திய கவர்ன்மெண்டாருக்கு அரிய சேவை செய்வதற்கு இதுதான் தங்களுக்கு நல்ல சந்தர்ப்பம்; தங்களைவிட எங்களுக்கு இச்சமயம் வேறு நல்ல கனவான் கிடைக்க வில்லை. இப்படிச் செய்தால், தங்களுக்கு "நைட்ஹூட்" அதாவது ஸர் பட்டம் வழங்கப்படுவதோடு, மாதம் 1,500 ரூபாய் சம்பளமும் அளிக்கப்படும். இதையொட்டி, வெகு சீக்கிரம் மாதம் ரூ. 4,000 சம்பளத்தில் காபுல் தேச சான்ஸலராகவும் தாங்கள் பதவி வகிக்கச் சந்தர்ப்பம் இருக்கிறது" என்ற ஆசை மொழிகளும் கூறப்பட்டன.

அக்காலை எல்லைப்புற முஸ்லிம்கள் அவசரப்பட்டு 'ஹிஜ்ரத்' செய்ததால், அல்லாமா மஷ்ரிகீ "இந்தக் காரியம் பிரயோஜனப்படாமல் போனால் என்ன செய்வது?" என்று விசனப்பட்டுக்கொண்டிருந்தார். ஆகையால் ஜனங்களை நோக்கி, "நீங்கள் இந்தக் காரியத்தைக் கட்டுப்பாடாகச் செய்யாததால், இது அபஜயமடைந்து விடுமோ?" என அஞ்சுகிறேன் என்று கூறுவார். ஆனாலும், முஸ்லிம்கள் செய்வதில் நியாயமுண்டு என்று, அல்லாமாவின் இஸ்லாமிய உணர்ச்சி தூண்டியது. ஆகையால் அல்லாமா அவர்கள், இஸ்லாமிய சேவையின்முன், அந்த ஸர் பட்டமோ, பல்லாயிர ரூபாய் சம்பளமோ ஒரு பெரிதல்ல என்ற முடிவுக்கு வந்தார். எனவே, அல்லாமா, நான்கு நாட்கள் வரை பொறுத்துப் பார்த்துவிட்டு அரசாங்கத்துக்கு ஒரு கடிதம் எழுதினார் அதில், "**நீங்கள் எனக்கு அளிக்க விரும்பும் பதவிகளும் பட்டங்களும் எனக்கு வேண்டாம். அப்படி, நான் அந்தப் பதவியை ஏற்றுக்கொண்டுதான் தீர வேண்டுமென்று வற்புறுத்துவீர்களாயின், தற்போது நான் வகிக்கும் உத்தியோகமும் எனக்கு வேண்டாம்; இதோ ராஜிநாமா**" என்று எழுதி யனுப்பிவிட்டார்.

ஆஹா! என்ன தியாகம்! இந்த ஹிந்துஸ்தானத்தின்கண், இங்ஙனம் பதவிகளும் பட்டங்களும் காலடியில் வந்து காத்துக்கொண்டிருக்கையில், இஸ்லாத்துடைய நன்மைக்காக, அனைத்தையும் தியாகம் செய்த அல்லாமாவுக்கு ஆயிரத்தில் ஒரு பங்கு ஒப்பானவர் யாரேனுமுண்டா? இல்லை.

அங்ஙனம் தியாகம் செய்து மறுத்து விட்டபின், அரசாங்கத்துடைய 'கண்ணோட்டம்' நம் இனாயத்துல்லாகான்மீது திரும்பியது. அல்லாமாவிடம் பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்று திரை மறைவில் பல பிரயத்தனங்கள் நடந்தன; அல்லாமாவின் சிறு சிறு கோரிக்கைகள்கூட மறுக்கப்பட்டன. இறுதியில் அரசாங்கத்தார் அவருடைய அந்தஸ்துக்கு முரணாக, ஒரு ஹெட்மாஸ்டர் பதவியில் அவரை வைத்து 2,000 ரூபாய் சம்பளம் கொடுக்கத் தலைப்பட்டார்கள். அரசாங்கத்தின் காரியஸ்தர்களுடைய அற்ப குணத்தையும், கீழ்த்தரச் சுபாவத்தையும் விளக்க இந்த அத்தாக்ஷியே போதும்.

உத்தமர் அல்லாமா அவர்கள், மேற்படி நிராகரிப்புக்குப் பின்னர், 1920-க்குப் பிறகிருந்து, வருங்காலச் சமூகத்துக்குரிய ஒரு மகத்தான சேவையில் ஈடுபட்டார்கள். அது பின்வருமாறு:—

### "தஜ்கிரா" நூல் இயற்றல்

1917-ம் ஆண்டு முதல் அல்லாமா மஷ்ரிகீ அவர்கள் உத்தியோகம் வகித்திருந்த காலங்களில்கூடச் சமூக சீர்திருத்தத்துக்கான உயரிய இலக்ஷியங்களை விட்டும் அவர் ஒரு விநாடியும் மறந்திருக்கவில்லை. அந்நாட்களில் அல்லாமா அவர்கள், அறிவாற்றலைக் கொண்டு முயல்வதற்குத் தக்க பிராயத்தினராயிருந்தார். அந்தக் காலத்தில் நிலைமையானது, முஸ்லிம் சமூகத்தைப் பற்பல சஞ்சலங்களிலும் தொல்லைகளிலும் உழலவைத்து, நேரான பாதையில் செல்லவும், சமூகம் ஒற்றுமையடையவும் முடியாதபடி இருந்துவந்தது. இவற்றையெல்லாம் அவர்கள் கண்டறிந்து, நன்கு ஆலோசித்து, தீர்க்கமான ஒரு வழியைக் கண்டு பிடித்தார். அந்தக் காலத்தில் மலிந்திருந்த கட்சிகள், இயக்கங்கள், கிளர்ச்சிகள்-எதிலும் ஈடுபடாமல் ஒதுங்கியிருந்து, ஒரு நல்ல வழியைக் கண்டு பிடிப்பதென்பது சாதாரணச் சுலப விஷயமல்ல. இறுதியாய், ஆண்டவன் அவருக்களித்திருந்த அபார அறிவாற்றலைக் கொண்டு ஓர் அருங்காரியத்தை செய்யத் தொடங்கினார். இவ்வாறு 4-வருடகாலம்



இடைவிடாமல் முயற்சித்து வந்தார். **ஹிஜ்ரத், கிலாபத், காங்கிரஸ்** முதலிய கிளர்ச்சிகள், இயக்கங்கள் இவற்றின் ஓய்ச்சலுக்குப் பின், 1924-ல் அல்லாமா மஷ்ரிகீ அவர்கள், "தஜ்கிரா" என்ற அரும் பெரும் நூல் இயற்றிச் சமூகத்தின் முன் சமர்ப்பித்து; இஸ்லாமிய உலகத்தை, மரணம்-ஜீவன் என்ற போராட்டத்திலிருந்து காப்பாற்றினார்.

பல நூற்றாண்டாக நம் முஸ்லிம் சமூகத்தினர், பரிசுத்த குர்ஆனின் நற்போதனைப்படி அமல் புரியாததாலும், தவறான கொள்கைகளில் ஆழ்ந்து போய்க் கிடந்ததாலும் குர்ஆனுடைய கௌரவத்திற்கு ஏற்பட்டிருந்த களங்கத்தை, அல்லாமா அவர்கள் தம்முடைய பேனாவின் மகிமையால் ஒரே அடியில் களைந்தெறிந்து விட்டார். உலக மக்களுடைய முன்னிலையில், சர்வலோக ரக்ஷகனான ஆண்டவனின் இறுதியான சத்திய போதனை—உண்மையான மார்க்கம் யாதென்பதை எடுத்தோதி விட்டார். "முஸ்லிம்களே! நீங்கள் உலகத்தில், முயற்சிப் பிரயாசையினால் சிறந்து முன்னேற விரும்பினால்,—நீங்கள் கண்ணியத்தோடு வாழ விரும்பினால்—அசல் முஸ்லிம்களாக நீங்கள் இலங்க விரும்பினால்—உங்கள் எல்லாம் வல்ல அல்லாஹுத ஆலா தன்னுடைய **பாமர நபி**யின் மூலமாய் அருள்பாலித்துள்ள அரிய பெரிய போதனையைப் (குர்ஆனை) பின்பற்றி யொழுகுங்கள்" என்று அல்லாமா அந்நூலில் எச்சரித்தார்.

### "தஜ்கிரா"வுக்கு அகில உலக கீர்த்தி

அல்லாமாவுடைய இந்த அரிய புஸ்தகமானது இஸ்லாமிய உலகத்திலே ஒரு பெரிய அதிர்ச்சியை உண்டுபண்ணி விட்டது. நூலாசிரியரான அல்லாமாவுடைய எழுத்துத் திறமையும், வசன நேர்மையும், பகிரங்கப் பேச்சும், அதில் இலங்கும் விளக்கமான கருத்துரையும், இணையற்ற பொழிப்புரையும், பொதுவாக ஆலிம்களுடைய கண்களைத் திறந்துவிட்டன. எனவே, நாட்டின் பல திக்கிலுமிருந்து, பலதரப்பட்ட அறிவாளிகளிடமிருந்து, அப்புஸ்தகத்தைப் பாராட்டி 25,000 கடிதங்கள் அல்லாமாவுக்கு வந்தன. பாமர ஜனங்களோ, அதைக் "கண்களுக்குரிய ஜோதி" என்று புகழ்ந்தார்கள். கனவான்கள், "இது எங்களுக்கு ஜீவனை அளித்துள்ளது" என்று கூறினர். தியானத்தில் உட்காரும் பீர்களும் இமாம்களும் பிஷாவருக்கு ஓடோடிச் சென்று அல்லாமாவுடைய திருச் சமுகத்தில் மண்டியிட்டு உட்கார்ந்தனர். தலைவர்கள், தங்கள் மேடைப் பிரசங்கத்தின் போக்கையே மாற்றிக்கொண்டனர். எனவே யார்யார் அந்த "தஜ்கிரா"வைப் படித்தார்களோ, அவர்கள் எல்லோரும் குர்ஆனுடைய கட்டளைக்கு முழுதும் சிரஞ்சாய்த்தார்கள்.

ஒரு பிரபல முஸ்லிம் புரொபஸர், அந்நூலைப் பாராட்டி யெழுதியிருப்பதாவது:— "நான் குர்ஆனை ஒப்புக் கொள்ளத்தகாததென எண்ணியிருந்தேன்; நிரோம் ஆர்கனியம் என்பதையே உலகத்தின் மகாப் பெரும் கிரந்தம் என்று கருதியிருந்தேன். இப்போது நான் குர்ஆன் ஆண்டவனுடைய வேதங்களில் சிறந்ததென்றும், தங்கள் "தஜ்கிரா"வை பூமியிலுள்ள நூல்களில் சிறந்ததென்றும் ஒப்புக் கொள்கிறேன்."

மற்றொரு பிரபல எழுத்தாளர், அல்லாமாவுடைய கரங்களை முத்தமிட்டுப் புகழ்ந்தார்.

---

# பொன் மொழிகள் (Golden Words)

(மௌலவீ, ஸிராஜீ-பாகவீ, கீரனூர்)

30. முயற்சியே எக்காரியத்திலும் முன்னேற்றமடையச் செய்யும். யாதாவது ஒரு வேலையை முதலில் செய்து கைகூடாத பொழுதே ஊக்கம் கெட்டு விடாதே. மீண்டும் மீண்டும் முயற்சி செய்தால் அஃது எப்படியும் கை கூடும்.

31. நன் மொழியால் உண்டாகும் காரியம் வன் மொழியால் உண்டாகாது. எதையும் எவரையும் துன்புறுத்தலாகாது. நன் மொழியாலும் மரியாதையாலும் உபசாரத்தினாலும் முயன்றால் சகல காரியங்களிலும் சித்தி பெறலாம்.

32. அழுக்கடைந்த ஆடைகளை அரசன் எவ்வாறு ஏற்றுக் கொள்ள மாட்டானோ அவ்வாறே பாவத்தில் மூழ்கி இருளடைந்த இதயங்களை இறைவன் ஏற்கமாட்டான்.

33. ஒரு பெருந்தடாகம்; அதில் தாமரை மலர் மலர்ந்து நறு மணத்தை வீசுகின்றது; நான்கு பக்கங்களில் வெகு தூரத்திலிருந்து தேனீக்கள் பறந்து வந்து அதிலுண்டான அமுதை அருந்தி ஆனந்தங் கொள்கின்றன. அங்ஙனமே தரணி எனும் தடாகத்தில் மகான் முஹம்மது நபி(ஸல்) ஒரு மலர் போல் மலர்ந்து உலக முழுவதற்குமே தங்களது ஞான மென்னும் நறுமணத்தையும், அன்பென்னும் தேன் துளிகளையும் நிரப்பினார்கள். மாநில மகான்கள் அவ்வன்பையும் ஞானத்தையும் அடைந்து ஆனந்திக்கின்றனர். சிலரோ துரதிருஷ்டர்களாக இருக்கின்றனர்.

34. சதா காலமும் உண்மையே பேசு. நீ தப்பு செய்திருந்த போதிலும் பொய் பேசாதே. அது தப்பிதத்தை அதிகப் படுத்துகிறது. ஜனங்களெல்லாம் சத்தியவானையே பிரீதிக்கிறார்கள். தெய்வத்துக்கும் அவனிடத்தில் கருணையுண்டு. சத்தியவந்தன் சதா காலம் சுகமாகவே இருப்பான். அவன் யாருடைய முகத்தைப் பார்த்த போதிலும் தலை குனிய வேண்டியதில்லை.

35. உன்னுடையது அல்லாத எந்தப் பொருளையும் பெற்றுக் கொள்ளாதே. இதுவே சுகத்துக்கு மார்க்கம். பிறருடைய ஓர் அரிசியையும் காணாமல் கைப்பற்றுபவனும் திருடனே. இவனுக்கும் ஆயிரம் ரூபாய் திருடின கள்வனுக்கும் குணத்தில் யாதொரு வித்தியாசமும் கிடையாது. ஆகவே ஆரம்பத்திலேயே திருட்டுத் தொழிலை விட்டு விடல் வேண்டும்.

36. கைக்குப் பணம் வருவதற்கு முன் செலவு செய்யாதே. பணம் வந்தபிறகு கொடுப்பதாகச் சொல்லி எந்த வஸ்துவையும் கடனாகக் கொள்ளாதே. ஒரு பொருள் உனக்கு எவ்வளவோ அவசியமாயிருந்த போதிலும் சரியே, பணம் கொடுத்தாலொழிய அதைக் கைப்பற்றாதே. கடன் பட்டு அதிகமாய்ச் செய்வதை விடச் சம்பாதித்துக் கொஞ்சமாய்ச் செய்வதே சிரேஷ்டமானது.

37. எண்சாணுடம்பை ஒரு சாணாக்கிக் கொண்டு நம்மிடம் வந்து யாசிப்பவர்கட்கு நாம் கொடுத்து உதவும்படியான உத்தமமான குணத்தை நாம் தேடிக்கொள்ளல் வேண்டும். அதுவே மேலான குணம். ஆகையால் இரப்போர்க்கு இல்லை என்னாது ஈயும் கொடை வள்ளல்களாக இருக்க வேண்டும்.

38. தர்மம் ஈவதில் பல வகையுண்டு. 1. பிரயோஜனத்தை நாடி ஈதல். 2. இச்சையை நாடி ஈதல். 3. புகழை எண்ணி ஈதல். 4. ஒருவர் விரும்பியபின் ஈதல். 5. பயத்தைக் கருதி ஈதல். இவை யெல்லாம் பயனற்றவையும் சிறந்ததல்லாதவையு மாகும். ஆனால் பிரதி பிரயோஜனத்தை விரும்பாது பிறர் துன்பமகற்ற இரக்கத்துடன் ஈவதே ஈடிலாத் தர்மமாகும்.

39. கோபம் ஏற்படுங்கால் அறிவு சிதைந்து, முகவொளி மழுங்கி, நன்மை தீமை தோன்றாது தேகம் மாறுகிறது. இக்கோபாக்கினி தணிய இன்சொல்லே அரும் பெரும் மருந் தாகும். மெல்லிய மொழிகளால் பாகுபடுத்தி அம்மருந்தினை உட்கொண்டால் அந் நோய் தணிவுற்று அமைதியெனும் ஆனந்தம் மேலிடும்.

40. வீண் பெருமை கூறும் அவகுணம் உடையோன் தன்னிடத்தில் இல்லாத ஒன்றைத் தன்னிடத்தில் உள்ளதென்று நினைப்பான். இது தனக்கும் பிரயோஜனமின்றிப் பிறருக்கும் உபயோகமின்றி இருக்கும். இவ் வவகுணத்தைச் சிறந்ததெனப் பூணுவர் பேதையர். இன்னவர்கள் சன்மார்க்க நெறியுள்ளவராக இருக்க மாட்டார்கள். இதைப் போக்க அவன் தன்னை முதலில் அறிய வேண்டும்.

41. நம்மைக் காட்டிலும் மேலான தன்மையிலிருக்கின்றவர்களைக் கண்டு நாம் பொறாமைப் படலாகாது. உள்ளதைக் கொண்டு திருப்தி அடைய வேண்டும். நமக்குக் கீழான நிலையிலுள்ளவர்களைக் கண்டு நமக்கு இம்மட்டில் அல்லாஹ் அளித்த பாக்கியத்திற்கு நன்றி செலுத்திச் சந்தோஷப்படல் வேண்டும்.

---

# HADIS ஹதீஸ்

## MISHKAT - UL - MASABIH மிஷ்காத்துல் மஸாபீஹ்

(மதுரை ஆலீஜனாப் M. K. M. K. மரைக்காயர் மொழி பெயர்ப்பது)

(முன் தொடர்)

(h) **அல்லா(ஹ்)வின் ஏகத்துவத்தின் மீது விசுவாசங் கொள்ளுதல்.** சிருஷ்டிக்கு முதற் காரணமும் இறுதிக் காரணமுமாகிய சர்வ வல்லமையுடைய சக்தி ஒன்றே உளதென்று விசுவாசங் கொள்ளும்படி இஸ்லாம் கற்பிக்கிறது; இச்சக்தியே அல்லாஹ் அல்லது கடவுள் என்று அழைக்கப்படுகிறது. இவ்வேகத்துவக் கொள்கையானது, இறைவன் எங்கும் நிறைந்தவன், எல்லாம் வல்லவன், எல்லாம் அறிந்தவன் என்றும், அவன் திருவுளச் சித்தமின்றி அணுவும் அசையாதென்றும், மானிடர் இவ்வுலகிற் புரியும் செயல்களையொட்டி அவனுக்கே உத்தரவாதியாக வேண்டியவர் ஆவரென்றும் நம்பவேண்டும் என்னும் பொருள் கொண்டதாகும். இஸ்லாத்தின் இவ்விசுவாசம் விக்கிரஹாராதனைக்கும் திரியேகத்துவக் கோட்பாட்டிற்கும் நேர் முரணானது; ஏனெனில், இக்கோட்பாடுகள் இறைவனது ஏகத்துவத்தையும் சர்வ வல்லமைப் பண்பையும் மறுப்பனவாயிருக்கின்றன. இஸ்லாம் மார்க்கம் விக்கிரஹத் தொழும்பை வேரறக் களைந்து, அம்மாசணுகாது காக்கும் முன்னெச்சரிக்கை யுபாயமாக, உயிர்ப்பிராணிகளின் உருவப் படங்கள் நாலவிடும் வழக்கத்தை ஒழிக்கவும் முயன்றிருக்கிறது.

(i) **ஈமானும் இஸ்லாமும்.** இவ்விரு மொழிகளுக்குமிடையே சொற்ப வேற்றுமையிருக்கிறது. ஈமானைக் காட்டினும் இஸ்லாம் அகன்ற கருத்துடையது. இஸ்லாம் என்பது இறைவனுக்குப் பரிபூரணமாய்க் கீழ்ப்படிந் தொழுகலாகும்; ஈமான் என்பது விசுவாசப் பிரமாணங்களை வாக்கால் மொழிந்து மனத்தால் மெய்ப்பித்தலாகும். இஸ்லாம் ஐந்து விஷயங்களின் மீது நிறுவப்பட்டுளது; அவ்வைந்தனுள் ஈமான் ஒன்றாயிருக்கிறது. இஸ்லாம் என்பது பொதுப் பெயராகவும், ஈமான் என்பது சிறப்புப் பெயராகவும் இருக்கிறது. ஆகையால் முஸ்லிம் என்னும் பதத்தைக் காட்டினும் முஃமின் என்பது விசேடக் கருத்தடங்கியதாயிருக்கிறது. "நாங்கள் விசுவாசங் கொண்டுள்ளோம் என்று பாலைவன வாசிகள் கூறுகிறார்கள். 'நீங்கள் விசுவாசிக்கவில்லை; ஆனால் நாங்கள் கீழ்ப்படிந்தோம் எனச் சொல்லுங்கள்; விசுவாசம் இதுவரை நுங்கள் நெஞ்சங்களுட் புகவில்லை' என்று கூறுக" என்பது குர்ஆன் ஷரீபின் திருவாக்கியமாகும். (குர். 49 : 14). "எவருடைய நாவினின்றும் கரங்களினின்றும் முஸ்லிம்கள் க்ஷேமமாயிருக்கின்றனரோ அவரே முஸ்லிமாவர்; இன்னும் எவர் மானிட வர்க்கத்தின் உதிரங்களுக்கும் சொத்துக்களுக்கும் புகலிடமாயிருக்கின்றாரோ அவரே மூமினாவர்" (1 : 52) என்று நபிகனாதர்(ஸல்) அவர்கள் அருளிச் செய்திருக்கிறார்கள். விசுவாசம் செயலினின்று தனித்து நிற்பது; ஆனால் இஸ்லாம் விசுவாசத்தையும் செயலையும் அடக்கி நிற்பதாகும். "நிச்சயமாக மனிதன் நஷ்டத்திலிருக்கிறான்; விசுவாசங் கொண்டு நன்மை புரிந்தவர்களைத் தவிர..." என்று குர்ஆன் (103 : 2 - 3) கூறுகிறது. இஸ்லாம் நாவால் மொழிவதா யிருக்கக் கூடியதாய் இருக்குங்கால், ஈமான் இருதயத்தை யொட்டி நிற்பதாயிருக்கிறது. ஹதீஸ் 3 : 70-ம் குறிப்புரை 50-ம் காண்க. ஹதீஸ் 1 : 10 ல் இவ்விரு விஷயங்களையும் குறித்த வேறு பாகுபாடு விவரிக்கப்பட்டுளது.

(j) **விசுவாசம் கூடுதலும் குறைதலுமுண்டு.** இருதயமானது விசுவாசத்திற்கு இருப்பிடமாயிருக்கிறது, இஸ்லாத்தைத் தழுவும் ஒருவனுடைய நெஞ்சகத்தின் வரனத்திலே, விசுவாசமானது, ஆரம்பத்தில் இளம் பிறையின் ஒளிபோற் பிரகாசிக்கிறது. நற்செயல் புரிதல் என்னும் உணவு பெறுவதற்குத் தக்கபடி அவ்விசுவாசம் வளர்பிறை போல் வளர்ந்து செழிக்கிறது. "அஃது அவர்களுடைய விசுவாசத்தையே அதிகரிக்கிறது" என்று குர்ஆன் (33 : 22) கூறுகிறது. இவ்வாறு வளரும் விசுவாசத்தின் ஒளி இருதயமண்டலம் முழுதுஞ் சூழ்ந்து பிரகாசிக்கிறது. இனி மற்றொரு பக்கலில், பாசாங்கும் விசுவாசமின்மையும், நெஞ்சகத்தைக் கறைப்படுத்தி, அக்கறைப் புள்ளிகளை நாளுக்குநாள் வளர்த்துப் பரப்பி, இருதய மண்டலம் முழுவதும் இருள் கவியச் செய்கின்றன. "அவ்வாறன்று! ஆனால் அவர்கள் சம்பாதித்துக் கொண்டிருந்தது (புரிந்த செயல்) அவர்களுடைய நெஞ்சங்களைக்

கறைப்படுத்தி விட்டது.'' (குர். 83 : 14). நல்லொழுக்கங்கள் விசுவாசத்தை வளர்க்கும் ஆகாரங்களாயிருக்கின்றன. புண்ணியச் செயல்கள் புரியாவிடத்து, அமரபட்சச் சந்திரன் போன்று விசுவாசம் நாளடைவிற் றேய்ந்தொழிந்து, நெஞ்சகம் சாத்தானுக்கு உறைவிடமாகிவிடும். இதுபற்றி குர்ஆன் ஷரீப் கூறுவன வருமாறு:—''(வேதத்தின்) ஒவ்வோர் அதிகாரம் வெளியாகுந்தோறும், 'இஃது நுங்களில் எவருக்கு விசுவாசம் அதிகரிக்கச் செய்திருக்கிறது?' என்று வினவுவோர் அவர்களுக்குள் இருக்கின்றனர்; அதுகாலை விசுவாசிகள் விஷயமோவெனின், அஃது அவர்கள் விசுவாசத்தை அதிகரிக்கிறது; மேலும் அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். இனி நோய் கொண்ட இருதயங்களுடையார் விஷயமோவெனின், அஃது அவர்களுடைய அசுத்தத்திேனாடு அசுத்தம் அதிகரிக்கச் செய்கிறது.......'' (9:124-125). ''நமது விசுவாசத்திேனாடு விசுவாசம் அதிகரிக்குமாறு விசுவாசிகளுடைய இருதயங்களில் அமைதியை இறக்கியருளினவன் (அல்லா(ஹ்)வாகிய) அவனே!'' (48:4). ''மேலும் நாம் அவர்களுக்கு நேர் வழி காட்டலை அதிகரித்தோம்.'' (18:13). ''நேரிய வழிச் செல்வோருக்கு அல்லாஹ் நேர்வழி காட்டலை அதிகரிக்கிறான்......'' (19:76). விசுவாசம் அதிகரித்தலும் குறைதலும் உண்டென்று மேலே குறிப்பிட்ட திருவாக்கியங்கள் தெளிவாய்க் காட்டுகின்றனவாயினும், இவ்விஷயமானது, இஸ்லாத்தின் ஆரம்பகாலத்து வாழ்ந்த ஆராய்ச்சியாளருக்கிடையே உக்கிரமான வாக்கு வாதத்திற்குட்படுத்தப் பட்டதொன்றென்பது இங்குக் குறிப்பிடத் தக்கது; எனவே இவ்விஷயத்தில் நால்வகைக் கருத்துடையார் எழுந்தனர்:—(a) ''விசுவாசமானது நெஞ்சகத்து மாத்திரம் பூண்டிருத்தலாகும்'' என்று ஜஹ்ம் இப்னு ஸப்வான் கருதினர்; (b) ''அல்லாஹ் ஒருவனன்றித் தெய்வம் பிறிதில்லை; முஹம்மது(ஸல்) அவனது திருத்தூதராவர் எனக் கூறுதலே விசுவாசமாகும்'' என்று கைலான் இப்னு முஸ்லிமும், கர்ராமிய்யா வகுப்பினரும் கூறினார்கள்; (c) இமாம் அபூஹனீபாவும், அபுல் ஹசன் அஷ்அரீயும், ''விசுவாசமானது, நெஞ்சகத்து நம்பிக்கை பூண்டு, வாக்கினால் மெய்ப்பித்தலாகும்'' என்னுங் கொள்கையுடையார். இவர்கள் கருத்தின்படி விசுவாசம் (கூடாமற் குறையாமல்) நிலையானதாகும்; (d) புகாரீயுட்பட்ட ஏனைய இமாம்கள் யாவரும், மேற்கூறியவற்றிேனாடு, அல்லா(ஹ்)வும் அவனது திருத்தூதரும் அருளிய கட்டளைகளுக்கு முற்றிலுங் கீழ்ப்படிந்தொழுகல் என்பதுஞ் சேர்ந்ததே விசுவாசமாகும் என்னுங் கோட்பாடுடையவர்கள்; இவர்கள் கருத்தின்படி விசுவாசம் அதிகரித்தலும் குறைதலுமுண்டு.

(k) **மெய்யான விசுவாசம்.** இஃது, உலகப் பொருட்கள் எல்லாவற்றைக் காட்டினும் அல்லா(ஹ்)வின் தூதர்மீது மிக்க அன்பு பூண்டிருத்தலாகும்; (1:13, குறிப்புரை 19); இதன் இனிமை மூன்று பொருட்களில் அமைந்திருக்கிறது; (1:14-15) இஃது, அல்லா(ஹ்)வின் பொருட்டாகவே எச்செயலையும் புரிதலாகும்; (1:26) இது, (மார்க்க விரோதமான) நூதன ஆசாரங்களை எதிர்த்துப் போராடுதலாகும்; (1:18) இஃது, ஒருவன் தனக்கென வேண்டுவதை மற்றையோர்க்காகவும் வேண்டுதலாகும்; (1:39,4 ப. வீ.) இஃது அயலாரை நேசித்தலாகும்; (1:40, 10 ப. வீ.) இது நற்குண சீலராயிருத்தலாகும்; (1:41) இது பிறர்மனை விழையாமலும், திருடாமலும், கொள்ளையிடாமலும், மதுவருந்தாமலும் இருத்தலாகும்; (1:30,32) இஃது அல்லா(ஹ்)வைக் குறுக்கிட்டு வினவாதிருத்தலாகும்; (1:34,35) விசுவாசம் மதீனாவிற்கு மீள்வதாயிருக்கிறது; (1:37).

(l) **விசுவாசம்** சுவன வாழ்வு தரும்; (1:21, 22,24,25,27,46. 3 ப. வீ., 6. ப. வீ.) இஸ்லாத்தின் தூண்கள்; (1:11,18) விசுவாசத்திற்கு எழுபத்து மூன்றேசொச்சம் கிளைகள் உள்ளன; (1:20) மூவருடைய விசுவாசத்திற்கு இரட்டிப்புச் சன்மானம்; (1:16,17). அல்லா(ஹ்)வைப் பற்றிப் புறங்கூறலும் பொய்ப்பழி சுமத்துதலும் விசுவாசம் ஆகா; (1:19, குறிப்புரை 26). ஈசா தெய்வகுமாரர் எனல் விசுவாசம் ஆகாது; (1:23, குறிப்புரை 30). பிற்காலச் சந்ததியாரால் விசுவாசம் கறைப்படுதல்; (1:28). விசுவாசத்தின் மூலமான மூன்று பொருட்கள்; (1:31). வெட்கம் விசுவாசத்துடன் இணைக்கப்பட்டதாகும்; (1:7 ப. வீ.) விசுவாசத்தோ டொட்டிய சோம்பலின் கண்டனம்; (1:27,42,3 ப. வீ, 6 ப. வீ). உத்தம வொழுக்கங்கள்; (1:43, 38, 5 ப. வீ). பாவமும் புண்ணியமும்; (1:2 ப. வீ).

**குர்ஆனிலுள்ள இதர ஆதாரங்கள்.** விசுவாசத்தின் ஒளி முன்னடக்கும்; (57:11,12). ஒரு பகுதியை நம்பி மற்றொரு பகுதியை நம்ப மறுத்தல்; (4:150-151). முந்தினதும் பிந்தினதுமான வேத வெளிப்பாட்டை விசுவாசித்தல்; (4:136). விசுவாச விருட்சம்; (14:24)



## ஹதீஸ்

10. ''நாங்கள்[1] ஒரு நாள் அல்லா(ஹ்)வின் திருத்தூதர்(ஸல்) அருகே உட்கார்ந்திருந்தோம்; அப்பொழுது, மிக்க வெண்மையான ஆடையணிந்தவரும், மிகக் கரிய உரோமங்கள் உடையவருமான ஒருவர்[2] எங்கள் பால் தோன்றினர். அவரிடத்து வழிப் பிரயாணத்திற்குரிய களைப்பொன்றுங் காணப்படவில்லை. எங்களுக்குள் எவரும் அவரை (இன்னாரென்று) அறியாதிருக்குங்கால், அவர் நபி(ஸல்) அருகே உட்கார்ந்தார். அப்பால் அவர் தமது இரு முழந்தாட்களையும் அவர்கள் (நபிபிரான்) உடைய முழந்தாட்களோடு சேர்த்து, தமது அகங்கையிரண்டையும் அவர்களுடைய இரு துடைகள் மீது வைத்து 'முஹம்மதே! இஸ்லாத்தைப் பற்றி எனக்கு அறிவுறுத்துக' என்றார். 'இஸ்லாம் என்பது, நிச்சயமாக அல்லா(ஹ்)வைத் தவிர (வழிபடுதற்குரிய) தெய்வம் பிறிதில்லை என்றும், நிச்சயமாக முஹம்மது அல்லா(ஹ்)வின் திருத்தூதராவர் என்றும் நீர் சாட்சியங் கூறுதலும், நீர் தொழுகையை நிலைநாட்டுதலும், நீர் ஏழைவரி[3] (ஜகாத்) செலுத்துதலும், நீர் றமலானின்[4] நோன்பு நோற்றலும், யாத்திரை புரிதல் உம்மால் இயலுமாயின் (அல்லா(ஹ்)வின்) வீட்டிற்கு[5] ஹஜ்ஜு செய்தலுமாகும்' என்று (நபி பிரான்) விடையளித்தார்கள். (அவர்) 'நீர் மெய்யுரைத்தீர்' என்றார். அவர் வினாவிடுத்து, (நபிபிரான் விடையை) மெய்ப்பித்தது பற்றி நாங்கள் வியப்படைந்தோம். 'ஈமானைப் பற்றி எனக்கு அறிவுறுத்துக' என்று (அவர் மீண்டும்) வினவினார். '(ஈமான் என்பது) அல்லா(ஹ்)வின் மீதும், அவனுடைய அமரர்கள்மீதும், அவனுடைய வேதங்கள்[6] மீதும், அவனுடைய தூதர்கள்மீதும், இறுதி(த்தீர்ப்பு) நாள் மீதும் நீர் விசுவாசங் கொள்ளுதலும், நன்மையும் தீமையும் அளவிடப்பட்டுள்ளன என்று நீர் விசுவாசங் கொள்ளுதலுமாகும்' என்று (நபிபிரான்) விடையிறுத்தார்கள். (அவர்) 'நீர் மெய்யுரைத்தீர்' என்றார். 'நன்மை புரிதலைப் பற்றி எனக்கு அறிவுறுத்துக' என்று (அவர் மீண்டும்) வினவினார். 'அஃது, அல்லா(ஹ்)வைக் காண்பதுபோல் நீர் அவனுக்கு ஊழியம் புரிதலாகும்; நீர் அவனைக் காணாவிடினும் நிச்சயமாக அவன் உம்மைக் காண்கிறான்' என்று (நபிபிரான்) விடையளித்தார்கள். 'ஊழிக் காலத்தைப்பற்றி எனக்கு அறிவுறுத்துக' என்று (அவர் மீண்டும்) வினவினார். 'வினவப்படுபவர்[7] வினவுகின்றவரைக் காட்டினும் அதுபற்றி அதிகம் அறிந்தவரன்று' என்று (நபி பிரான்) விடையளித்தார்கள். 'அதன் அறிகுறிகளைப்பற்றி எனக்கு அறிவுறுத்துக' என்று (அவர் மீண்டும்)

---

1. இந்த ஹதீஸ், அபூ ஹுறைறா வாய்வழியான மற்றோர் அறிவிப்பில், ''வெறுங்காலுடையாரும்'' என்னும் இடத்திலிருந்து பின் வருமாறு பேதப்படுகிறது:—''வெறுங் காலுடையாரும், நிர்வாணிகளும், செவிடரும், ஊமையரும் உலகுக்கு அரசராவர். ஐந்து விஷயங்களை அல்லா(ஹ்)வைத் தவிர வேறு எவரும் அறியார்.'' அப்பால் பின்வரும் குர்ஆன் வாக்கியத்தை (நபிபிரான்) ஓதினார்கள்:—''நிச்சயமாக அல்லா(ஹ்)வே ஊழிக்காலத்தைப் பற்றிய அறிவுடையவன்; மேலும் அவனே மழையை இறக்குகின்றான்; கருப்பைகளுக்குள் இருப்பதை அறிபவனும் அவனே; நாளையதினம் தாம் சம்பாதிக்கப் போவது யாதென எவருக்குந் தெரியாது. நாம் மரணம் அடையப் போவது எந்நாட்டில் என்பதையும் எவரும் அறியார்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாம் உணரும் அறிஞனாயிருக்கின்றான்.!'' (குர். 31:34).

2. அம்மனிதர் 'பரிசுத்த ஆவி' என்று பைபிள் கூறுகிற அமரர் ஜிப்ரீல் ஆவர். அவர் இஸ்லாத்தின் மூலக் கொள்கைகளைக் கற்பிக்கும் பொருட்டு, மானிட உருவங்கொண்டு, ஆடையணிந்தவராய், நபி பெருமானார் (ஸல்) அவர்கள் சமுகத்துத் தோன்றினார். இத்தகை ஹதீஸ், ஹதீஸ் குத்ஸீ எனப் பெயர் பெறும்.

3. இஃது இஸ்லாமிய சமூகத்தைச் சார்ந்த ஏழை மக்களின் நன்மைக்காகச் செல்வந்தரின் செல்வத்தின்மீது 100-க்கு $2\frac{1}{2}$ விகிதம் விதிக்கப்படும் கட்டாய வரியாகும். இதன் முழு விபரத்திற்கும் குறிப்புரை 657 காண்க.

4. றமலான் என்னும் பதம் கொடிய வெப்பம் எனப் பொருள்படும். ஆனால் மத சம்பந்தமான பரிபாஷையில், அஃது ஆண்டின் ஒரு பருவமாகிய நோன்பு மாசத்தின் பெயராய் வழங்குகிறது.

5. அல்லா(ஹ்)வின் வீடென்பது, மக்கா நகரிலுள்ள மிகப் பழமையும் பரிசுத்தமும் வாய்ந்த கஃபா என்னும் ஆலயமாகும்.

6. வேதங்கள், பைபிள் (இஞ்ஜீல்) குர்ஆன் முதலியனவாம். அவை 104 எனக் கணிக்கப்பட்டிருக்கின்றன; அவற்றுள் தௌறாத்தும், ஜபூரும், இஞ்ஜீலும், குர்ஆனும் நன்கறியப் பட்டவையாகும்.

7. ஊழிக் காலமாகிய உலக முடிவு நாள் எப்பொழுது நேரும் என்பது நபிமார்களுக்கும் அமரர்களுக்குங் கூடத் தெரியாதென்பதை இது காட்டுகிறது. அதனை ஆண்டவன் ஒருவனே அறிவான். (குர். 31:34).

வினவினர். 'அவை, அடிமைப்பெண் தனது நாயகியைப்[1] பிறப்பித்தலும், (பாதரட்சை யணியாத) வெறுங்காலுடையாரும், நிர்வாணிகளும், வறியருமான இடையர்கள் கட்டிடங்களில் வசிப்பதை நீர் காண்பது மாகும்' என்று (நபி பிரான்) விடையிறுத்தார்கள். அவர் சொன்னர்—அப்பால் அவர் சென்றுவிட்டார். (இறைவன் திருத்தூதர்) சற்றே மௌனித்திருந்து, அப்பால் என்னை நோக்கி, 'உமரே! வினவினவர் யாவரென்று உமக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். 'அல்லா(ஹ்)வும் அவன் திருத்தூதரும் மிகவும் அறிந்தவர்கள்' என்றேன். 'நிச்சயமாக அவர் ஜிப்ரீல் ஆவர்; உங்களுடைய மார்க்கத்தை[2] உங்களுக்குக் கற்பிக்கும் பொருட்டு வந்தார்' என்று (நபி பிரான்) அருளிச் செய்தார்கள்."

அறிவித்தவர்: **உமர் இப்னு கத்தாப். முஸ்லிம்**

11. "இஸ்லாம் ஐந்து காரியங்கள் மீது நிறுவப்பட்டுளது. (அவை) 'நிச்சயமாக அல்லா(ஹ்)வைத் தவிர (வழிபடுதற்குரிய) தெய்வம் பிறிதில்லை' என்றும், 'நிச்சயமாக முஹம்மது அவனுடைய அடியார் ஆவர்' என்றும் சாட்சியம் பகர்தலும், தொழுகையை நிலைநாட்டுதலும், ஏழைவரி செலுத்துதலும், ஹஜ்ஜும், ரமலான் நோன்பு மாகும்."

அறிவித்தவர்: **இப்னு உமர்**
**இருவரும் ஒப்பியது**

12. "விசுவாசம் (ஈமான்) எழுபதே சொச்சம்[3] கிளைகளுடையது; அவற்றுட் சிறந்தது, 'அல்லா(ஹ்)வைத் தவிர (வழிபடுதற்குரிய) தெய்வம் பிறிதில்லை' எனக் கூறுதலாகும்; அவற்றுள் அற்பமானது தீங்கு விளைவிக்கும் பொருளை (மக்கள் நடக்கும்) பாதையினின்று அகற்றுதலாகும்; மேலும் நாணமானது விசுவாசத்தின்[4] ஒரு கிளையாயிருக்கிறது."

அறிவித்தவர்: **அபூ ஹுறைரு**
**இருவரும் ஒப்பியது**

13. "தனது தந்தையையும், தனது புதல்வனையும், (மற்றைய) மாந்தர் யாவரையும்விட என்னை அதிகமாய் நேசிக்கும் வரை நுங்களுக்குள் எவரும் (மெய்யான) விசுவாசம் பூண்டவராகார்."[1]

அறிவித்தவர்: **அனஸ். இருவரும் ஒப்பியது.**

---

1. இவ்வறிகுறிகள், எஜமானர்கள் தமது பணிப் பெண்டிரை விழைந்து, அப்பெண்கள் வீட்டின் அரசிகள் ஆவரென்பதும், கல்வியறிவற்ற பாமர மக்கள் பணக்காரர்களாகவும் மாந்தருக்கிடையே செல்வாக்குடையவர்களாகவும் ஆவரென்பதுமாம்.

2. நபிகள் பெருமான்(ஸல்) அகில உலகத்திலுமுள்ள மானிட வர்க்கத்தினர் யாவருக்கும் வழிகாட்டும் தீர்க்கதரிசியாய் அனுப்பப்பட்டனர் என்பது சத்தியமாகும்; எனவே, உலக முடிவு நாளளவும், எல்லா நாடுகளிலும் எக்காலத்தும் வசிக்கும் மானிட கோடிகள், நல்லொழுக்கம், அரசியலறிவு, ஆன்மஞானம் ஆதிய எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தியடையத் துணைபுரியத் தக்கனவாகிய இஸ்லாத்தின் கோட்பாடுகளைக் கற்பிக்கும் விஷயத்தில், சர்வஞ்ஞனுகிய அல்லா(ஹ்)வின் கட்டளைக்கிணங்க ஜிப்ரீல் என்னும் வானவர் நபி பெருமானுருக்கு உதவி புரிந்தார்.

3. 'பில்உ' என்னும் பதம் மூன்று முதல் ஒன்பது வரை என்னும் பொருள் கொண்டது; ஆதலின் விசுவாசத்திற்கு எழுபத்து மூன்றிற்கு மேற்பட்டனவும் எழுபத்தொன்பதுக் குட்பட்டனவுமாகிய கிளைகள் உள்ளன. அஃதாவது, பல கிளைகள் சேர்ந்து ஒரு மரமாவதுபோல, ஈமான் என்னும் விசுவாசமானது, எழுபத்து மூன்றே சொச்சம் விஷயங்களைப்பற்றி நம்பிக்கை பூண்டிருத்தலாகின்றது. விசுவாசத்தின் கிளைகளாவன:—அல்லாஹ் ஒருவன் உளன் என்றும், அமரர்கள், ஷைத்தான், சுவர்க்கம், நரகம் உள்ளனவென்றும், நன்மை தீமைகளுக்கு முறையே சன்மானமும் தண்டனையும் பெறுதல் உண்மையென்றும் நம்புதலும், இவைபோன்ற வேறு சில விஷயங்களுமாம். ஒருவன் சம்பூரணமான மூமின் ஆவதற்கு, முக்கியமானவையாயினும், முக்கியமல்லாதவையாயினும், இவை எல்லாவற்றின் மீதும் நம்பிக்கை பூண்டவனுதல் வேண்டும். (குர்ஆன் 14:24 காண்க).

4. பொதுமக்கள் நடக்கும் பாதையிற் கிடக்கிற முட்களை ஒத்தவைகளும் மானிடர்க்குத் தீங்கு விளைக்கத் தக்கவைகளுமான பொருட்களை அகற்றுவது போன்ற அற்பப் புண்ணியச் செயலைப் புரியும் சந்தர்ப்பத்தைக் கூட முஸ்லிம்கள் இழந்துவிடலாகாதென்று இஸ்லாமிய விசுவாசம் கற்பிக்கிறது. அன்றியும், சமூக வாழ்க்கைத் துறையிலும், பொருளாதாரத் துறையிலும், ஆன்மஞானத் துறையிலும் மானிடராது முன்னேற்றத்திற்குத் தடையாய் நிற்பவற்றை ஒழிக்கும் மார்க்கத்திலும் முஸ்லிம்கள் ஈடுபட்டுழைத்தல் அவசியமென்றும் இது காட்டுகிறது. எனவே, ஜாதி பேதமாவது சமய வேற்றுமை யாவதின்றிச் சமூக ஊழியம் புரிதல் ஒவ்வொரு முஸ்லிம் மீதும் இஸ்லாம் சுமத்தும் கடமையாயிருக்கிறது.



(246-ம் பக்கத்தொடர்)

அடக்கமும் வெட்கமுமுள்ள ஒருவன், தீச்செயலை அணுகாமலும் முறைகேடாக வார்த்தையாடாமலும் எச்சரிக்கையாய் இருத்தல் இயல்பாதலின், நாணமானது, மெய்யான விசுவாசம் என்னும் விருட்சத்தின் ஒரு கிளையாகக் கருதப்பட்டிருக்கிறது.

1. இதற்குப் பின்வரும் குர்ஆன் திருவாக்கியங்கள் ஆதாரமாயிருக்கின்றன:— "(அல்லா(ஹ்)வின்) திருநபி, (விசுவாசிகள்) தம்மைக் காட்டினும் விசுவாசிகளுக்கு உயர்ந்தவராயிருக்கின்றனர்." (குர். 33:6). "அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (மானிடகோடிகள் பின்பற்றற்குரிய) உயரிய முன்மாதிரியாவர்." (குர். 33:21). பிரம்ம ஞானப் பெரும்பேறு பெற்றுய்வதற்குரிய எல்லா நல்லொழுக்கத் துறைகளிலும் மானிடர் யாவரும் பின்பற்றி யொழுகத்தக்க பரிபூரண இலக்கிய புருடோத்தமராக அப்பெருமானுர் அனுப்பப்பட்டுள்ளனர். ஆதலின் அல்லா(ஹ்)வின் அன்பைப்பெற முயலும் ஒவ்வொருவரும், தம்மால் மிகவும் நேசிக்கப்படும் தந்தையர், தனயர், மனைவியர், சொத்துச் சுதந்தரங்களாகிய எல்லாவற்றையும், அவசியம் நேருங்கால், தியாகஞ்செய்தாவது, இவ்வுலக வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் நபிகள் பெருமான்(ஸல்) அவர்களுடைய அடிச்சுவடு பற்றியொழுகவேண்டும். "நீங்கள் நேசிக்குமவற்றினின்று (தாராளமாய்ச்) செலவிடும் வரை நீங்கள் சன்மார்க்கத்தை எய்தவே மாட்டீர்கள்." என்று குர்ஆன் (3:91) கூறுகிறது. எனவே, இஸ்லாம் மார்க்கம், இவ்வுலகப் பொருட்கள் யாவற்றின் மீதுமுள்ள பற்றைக் காட்டினும், நல்லொழுக்கத்திற்கும் ஆன்ம முன்னேற்றத்திற்கும் அதிக முக்கியத்துவம் அளித்திருக்கிறது; அன்றியும் மார்க்கத்தின் அழைப்பிற்காக, முஸ்லிம்கள் எனைப் பொருட்கள் அனைத்தையும் துறந்துவிடச் சித்தமாயிருக்க வேண்டும் என்றும் அம்மார்க்கம் கற்பிக்கிறது. இந்த ஹதீஸைச் செவியேற்ற காலையில், ஹஜ்ரத் உமர்(ரலி) "இவ்வுலகப் பொருட்கள் அனைத்தையும் விட நான் அதிகப் பற்றுக் கொண்டிருப்பது என்மீது தான்; ஆனல் என்றன்னைப் பார்க்கிலும் நான் நபிகணதர்பால் அதிக நேயம் பூண்டிருக்கிறேன்" என்று கூறியதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# பரிசுத்த இஸ்லாம் THE SACRED ISLAM

Y. M. அய்துஸ்ஸலாம், கதிராமங்கலமிய்யி, (நீடூர்.)

சற்றேறக்குறைய 80 நூற்றாண்டுகளுக்கு முன் சர்வலோக ரக்ஷகன் அல்லா(ஹ்) இப்பூவுலகத்தைப் படைத்தான் என்பது சரித்திர உண்மை. என்று இப்பூவுலகத்தை அல்லா(ஹ்)படைத்தானோ, அன்றே நமது சத்திய இஸ்லாத்தையும் படைத்தான். இதற்கிடையே எத்துணையோ நூற்றுக்கணக்கான சமயங்கள், மார்க்கங்கள் தலைதூக்கின என்றாலும் அவற்றுள் சில தலை நசுக்கப்பட்டும் பல சின்னாபின்னப்பட்டும் கிடப்பதை நிதரிசனமாகப் பார்க்கின்றோம்.

ஒரு கூட்டத்தினர் தம்மை, பிரம்மாவின் முகத்து வழியாக வந்தவர்களென்றும் ஒரு சிலரை, பிரம்மாவின், விலா வழியாக வந்தவர்களென்றும், மற்றும் சிலரைக் கால் வழியாக வந்தவர்களென்றும் பறை சாற்றுகின்றனர். இவ்வேற்றுமையால் முகத்தின் வழியாக வந்தவர்கள், விலாவின் வழியாக வந்தவர்களின் வீட்டிலும், விலா வழியாக வந்தவர்கள், கால் வழியாக வந்தவர்களின் வீட்டிலும் சாப்பிடுவது முதற்கொண்டு எந்தச் சம்பந்தமும் வைத்துக்கொள்ளக் கூடாது என்பதாகவும் பறை சாற்றுகின்றனர்.

ஒரு கூட்டத்தினர் தாமே மேல் இனத்தார் ஆதலால் தம்மீது மற்றவர்களின் நிழல்கூடப் படக்கூடாது என்பதாகவும் சொல்லுகின்றார்கள். இன்னுமொரு கூட்டம் தமது வேதமாக ஏற்படுத்தியிருக்கும் அந்தப் புஸ்தகத்தை வாசிக்கும் பொழுது மற்ற வகுப்பினர்களின் செவியில் விழுந்து விட்டால் அவர்கள் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றப்படும் என்பதாகவும் இன்னும் பல ஆபாசமான விஷயங்களையும் கூறுகின்றனர். ஆனால் நமது சத்தியம் சமத்துவம் நிறைந்த இஸ்லாம் மதம், 60 கோடி மக்களை அடக்கிக்கொண்டிருக்கிற தென்பதில் எந்த ஆச்சரியமும் இல்லை.

பெரிய வீரதீர புருஷர்களின் இரத்தம் இஸ்லாம் என்ற பெரிய விருக்ஷத்திற்குத் தண்ணீராகப் பாய்ச்சப்பட்டிருக்கின்றது. நமது முர்சல் கரசர் முஹம்மது(ஸல்) அவர்கள் தற்காப்பு நிமித்தம் யுத்தம் நடத்த வேண்டியிருந்ததால். ஜஃபர் இப்னு அபீ தாலிப் என்பவரைப் படைத்தலைவராக அனுப்பி வைத்தார்கள். அந்தத் தலைவர் ஒரு கையில் வாள் ஏந்தினவராகவும் மற்றொரு கையில் இஸ்லாமியக் கொடியைத் தாங்கினவராகவும் சமர் புரிந்தார். ஆரம்பமாக வலது கரம் தறிக்கப்பட்டவுடன் அவர் அக்கொடியை வாயில் கவ்விக்கொண்டு இடது கரத்தால் வாளை ஏந்திப் போர் புரிந்தார். இடது கரமும் வெட்டப்பட்டபோது அவர் வாயினால் பிடித்துக் கொண்டிருந்த அக்கொடியைக் கீழே போடவில்லை. உடனே அவர் கழுத்தும் துண்டிக்கப் பட்டது. (இன்னாலில்லாஹி வ இன்னாஇலைஹி ராஜிஊன்) இது மட்டிலுமல்ல. இருலோக ரக்ஷகர் எம்பிரான் நபிகள் திலகம்(ஸல்) அவர்கள் ஹுனைன் என்னும் யுத்தத்தில் எதிரிகளால் தாக்கப்பட்டபோது 80 காயம் ஏற்பட்டது. மேலும் முகத்தில் இரத்தம் தாரைதாரையாக வடிந்து ஓடிக் கொண்டிருந்தது. இவ்வாறு வீரதீர புருஷர்களின் இரத்தத்தாலே இஸ்லாம் என்ற பெரிய விருக்ஷம் வளர்க்கப்பட்டு வந்திருக்கிறது. இத்தகைய இம்மார்க்கத்தின் மூலக் கொள்கை என்ன வென்பதைச் சற்று ஆராய்வோம். சத்தியம் சமத்துவம் சகோதரத்துவம் வாய்ந்த எமது மார்க்கம் எந்த மதஸ்தரையும் அவரவருடைய உரிமையோடே வாழச் சொல்லும்; மக்காவிலிருக்கும் மைதீனுக்கும் மதராஸிலிருக்கும் முஹம்மதுவுக்கும் குணத்தில் வித்தியாசமிருந்தாலும் கொள்கையில் சமத்துவமாக இருக்கச் சொல்லும்; ஈரோட்டிலிருக்கும் இபுறாஹீமுக்குக் கஷ்டம் ஏற்பட்டால் இங்கு இருக்கும் இஸ்மாயீலுக்குக் கஷ்டம் ஏற்பட்டதாகவே மதித்து உதவி புரியச் சொல்லும். இதற்கு உதாரணம் நமது மாபெரும் தலைவர் காயிதே அஃலம் ஜனாப் ஜின்னாஹ் அவர்களையே சொல்லலாம். சிந்து மாகாணத்தில் முஸ்லிம்கள் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டதற்குநன்கொடையாக ரூபாய் ஆயிரம்(1000) கொடுத்தது வாசகர்கள் அறிந்திருப்பார்கள். துருக்கியில் பூகம்பம் ஏற்பட்டு முஸ்லிம்கள் கஷ்டப்படுகிறார்கள் என்பதற்காக இந்திய முஸ்லிம் மக்களாகிய நாம் அனுப்பியுள்ள உதவியையே உதாரணமாக வைத்துக் கொள்ளலாம். என்னே எமது பரிசுத்த இஸ்லாம்!

# உண்மை உபதேசங்கள் அல்லது குத்பாத்-V

## GOOD SERMONS OR KHUTHBATH

BY MOULANA MAUDUDI

சோதரீர், ஆண்டவன் மேற்கண்ட இவ்விரண்டு உவமானங்களையும் நன்கு விளக்கிக் காட்டியதன் பின் இறுதியில் கூறுவதாவது:- "நன்னம்பிக்கை கொண்ட அவர்களைத் தாழ்ந்த இவ்வுலகிலும் இறுதிநாளிலும் அல்லாஹ் உண்மையான சொல் உறுதியைக் கொண்டு உறுதியானவர்களாய்ச் செய்கிறான். மேலும் அக்கிரமக்காரர்களான அவர்களை அவர்கள் செய்கைக்குத்தக்க முறையில் அல்லாஹ் வழி விலகும்படி செய்து விடுகிறான்" என்பதே. எனவே, உண்மையிலேயே ஆண்டவன்மீது பரிபூரண நம்பிக்கை கொண்டவர்கள், இவ்வுலகில் மட்டிலென்ன மறுவுலகிலும் மகா உச்சஸ்தாயியை அடைந்த மேன்மக்களாகவே விளங்கி நிற்பர். பரிசுத்த வார்த்தையாம் கலிமாவை ஏற்றுக் கொள்ளாத வீணர்களான மக்கள் உண்மையில் அக்கிரமக்காரர்களாகவே இருக்கின்றனர். இவர்கள் வெறுக்கத்தக்க கொடிய விஷயத்துக்குரிய மார்க்கத்தையே, அதற்கான சொல்லையே ஏற்றுக் கொள்ளுகின்றனர். எனவே, அல்லாஹ் இவ்வக்கிரமக் காரர்களின் சர்வ பிரயத்தனங்களையும் கிரியைகளையும் உபயோகமற்றனவாய்ச் செய்து விடுகின்றான். இதற்குக் காரணம் ஆண்டவனன்று. என்னெனின், இத்தகையோர் நேர்மையான காரியத்தில் ஈடுபடுவதில்லை. இதன் பயனாய் அவர்கள் இவ்வுலகிலோ மறு உலகந் தன்னிலோ சரியான நற்பயனைப் பெற்றுக் கொள்ள முடியாதவர்களாய்ச் சமைகின்றனர். காரணம் இவர்கள் செய்கையே யன்றி ஆண்டவனன்று.

சோதரீ,ர் இதுகாறும் நன்மையான வார்த்தையும் அஃதல்லாத வாக்கியமும் இவ்விரண்டுக்கிடையே காணப்படும் வித்தியாசமும் அதனால் ஏற்படும் பயனும் இன்னவையெனக் கண்ணுற்றீர்கள். எனவே, "நாம் பரிசுத்த கலிமாவென்னும் உண்மையான வார்த்தையையே கூறி ஏற்றுக்கொண்டுள்ளோம். ஆயினும், நாம் சந்தோஷமாகவும் சுகமாகவும் ஆனந்தமாகவும் காலங்கழிக்க முடியவில்லையே; நன்னம்பிக்கை யற்ற நேர்மையற்ற வார்த்தைக்குரியவர்கள் (காபிர்கள்) எங்குப் பார்த்தாலும் சந்தோஷமாகவும் சுகமாகவும் ஆனந்த மயமாகவுமே காணப்படுகின்றனரே இதற்குக் காரணம் யாதாயிருக்கலாம்" என்னும் சந்தேகம் உங்கள் மனத்தில் நிச்சயமாய்த் தோன்றலாம். இதற்கு விடையாதென்பதைப் பின்னே எடுத்துக் காட்டுகிறோம். கவனிப்பீர்களாக: ஆனால் ஒரு நிபந்தனை. யான் சொல்லக்கூடிய விஷயம் உண்மையா அல்லவா வென்பதை உங்கள் இருதயத்தினிடமே கேட்கவேண்டும். உங்கள் நாவின் விடையை நான் எதிர் பார்க்கவில்லை. அதாவது முதன் முதலாய் நீவிர் பரிசுத்த கலிமாவை ஏற்றுக்கொண்டுளோம். ஆனால் நாம் சந்தோஷமாயிருக்கக் கூடவில்லையே என்று கூறுவது மறுக்கமுடியாத ஒரு பொய் மொழியாகும். பரிசுத்த கலிமாவை ஏற்றுக்கொண்டோம் என்பதன் கருத்து அச்சொற்களை நாவினால் கூறிவிடுவது மட்டுமன்று. அதன் தாத்பரியத்தை உங்கள் மனத்தினால் ஏற்றுக்கொள்ளவேண்டும். இதற்குப் பின்னர், பரிசுத்த கலிமாவுக்கு விரோதமான எத்தகைய எண்ணமும் உங்கள் மனத்துள் வந்து ஊசலாடுவதும் அதற்கு விரோதமான காரியங்களைச் செய்வதும் கூடவே கூடாது.

சோதரீர், ஆண்டவனுக்காக உண்மையைக் கூறுங்கள். உண்மையிலேயே நீங்கள் இந்நிலைமையி லிருக்கின்றீர்களா? பரிசுத்த கலிமாவுக்கு விரோதமான அனேக இலக்ஷக் கணக்கான சத்தியத்தை நிராகரிக்கும் தன்மையுள்ள எண்ணங்கள் உங்கள் இருதயங்களுள் உதிக்கின்றனவா? இல்லையா? முஸ்லிம்கள் என்னப்படுவோரின் சிரங்கள் அல்லாஹ் அல்லாமல் இதரர்களின் முன்னே வணக்கம் புரிகின்றனவா இல்லையா? முஸ்லிம்கள் இதர சமூகத்தவர்களைக் கண்டு அஞ்சுகின்றனரா? இல்லையா? இதர மக்களின் உதவியின்மீது பூரண நம்பிக்கை உடையவர்களா யிருக்கின்றார்களா? இல்லையா? ஒரு சிலர் நமக்கு உணவளிக்கக் கூடியவர்களா யிருக்கின்றனர் என்று நினைக்கின்றார்களா? இல்லையா? இப்படியே முஸ்லிம்கள் அல்லாஹ்வின். சட்டதிட்டங்களை விட்டுவிட்டு இதர மக்களின் சட்ட திட்டங்களை அதிக சந்தோஷத்துடன் ஏற்று நடந்து செல்லுகின்றார்களா? இல்லையா? இது மட்டுமா? தங்களைத் தாங்களே முஸ்லிம்களென அழைத்துக் கொள்ளுகின்றவர்கள், நீதிஸ்தலங்களில் சென்று சாட்சியம் பகரும் போது, 'நாங்கள் ஷரீஅத்தின் சட்ட திட்டங்களை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால்,

அதற்கான உருவச் சடங்குகளேயே ஏற்றுக் கொண்டவர்களா யிருக்கிறோம், என்று பகிரங்கமாய்க் கூறுகின்றவர்களாக இருக்கின்றார்களா இல்லையா? இப்படியே இவ்வுலக நன்மையை அடைவான் வேண்டி ஆண்டவனின் சட்டதிட்டங்களை முன்பின் யோசனை ஒன்று மின்றியே தகர்த்தெறியும் மக்கள் உங்களுக்குள்ளே இருக்கின்றார்களா? இல்லையா? இதே முறையில் ஆண்டவனுக்கு ஒரு சிறிதும் அஞ்சாமல் நன்னம்பிக்கையற்ற மக்களான காபிர்களின் கோபத்திற்கு அளவு கடந்து அஞ்சும் மக்கள் உங்களுக்குள்ளாக இருக்கின்றார்களா? இல்லையா? ஆண்டவனின் தயவையும் தாக்ஷண்ணியத்தையும் பெற்றுக்கொள்ள எவ்விதக் காரியத்தையும் செய்யாமல் நன்னம்பிக்கையற்ற மனிதர்களின் தயவையும் தாக்ஷண்ணியத்தையும் பெறுவதற்காக அனேகவித காரியங்களைச் செய்பவர்கள் உங்களுக்குள்ளே இருக்கின்றார்களா? இல்லையா? இன்னும் ஆண்டவனின் அரசாட்சி ஒன்றுண்டு என்பதை மனத்தில் நினைக்காமலும் அவன் உண்மையிலேயே இருக்கிறான் என்பதைச் சரியாய் மனத்தில் கொள்ளாமலும் நன்னம்பிக்கையற்ற மக்களின் அரசாட்சியே அவர்கள் அதிகாரமே உண்மையானதென்று நினைத்து நடக்கின்ற மக்கள் உங்களுக்குள் இருக்கின்றார்களா? இல்லையா? யாம் மேலே கூறியபடி ஆண்டவனுக்காக உண்மையைக் கூறுங்கள். உங்கள் நா எதனையேனும் சொல்லிக் கொள்ளட்டும். உங்கள் இருதயங்கள் யாது கூறுகின்றன என்பதையே யான் கடாவுகின்றேன். யான் கூறும் இவ்விஷயம் உண்மையானது தான் என உங்கள் மனங்கள் ஏற்றுக் கொள்ளுமாயின், பின்னர், பரிசுத்த கலிமாவான வாக்கியத்தை நாங்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறோம் என்று கூசாமல் கூறுவது ஒரு சிறிதும் பொருத்தமாகுமா? இதற்குமேல் நாங்கள் சந்தோஷமாகவும் சுகமாகவும் இருக்கவில்லையென்று கூறுவது நியாயமாகுமா என்பதைச் சிந்தனை செய்து பாருங்கள். எனவே, முதன் முதலாய் உண்மையான மனத்துடன் ஆண்டவன்மீது நம்பிக்கை வையுங்கள். பரிசுத்த கலிமாவுக்கொப்ப உங்கள் வாழ்க்கை முறையைச் சீர்திருத்துங்கள். பின்னர், இதனால் ஏற்படும் மகா உறுதியான விருக்ஷம் ஆண்டவன் கூற்றின்படி மகா உச்சஸ்தானத்தை அடையும்; அதிக செழிப்புள்ளதாகவும் தென்படும். இது உண்மை. அல்லாஹ் பொய்க் கூற்றுளனல்ல. நீங்கள் நேர்மையாய் நடந்தால் அதற்கான பயன் உங்களுக்குக் கிடைத்தே தீரும். இது அல்லாஹ்வின் சத்தியமான வார்த்தை.

இதற்குப் பின்னர், உங்கள் கூற்றுப்படி, "பரிசுத்த கலிமாவை ஏற்றுக் கொள்ளாத மக்கள் இவ்வுலகில் நன்கு செழிப்பாகவும் சந்தோஷமாகவும் வாழ்ந்து வருகின்றனர்" என்பதும் உண்மையன்று. வெறுக்கத்தக்க வார்த்தையையும் அதற்கான கிரியைகளையும் செய்கிறவர்கள் எப்பொழுதும் சந்தோஷப்படவில்லை; இப்போதும் சந்தோஷமாயில்லை; இனியும் சந்தோஷமாயிருக்கப் போவதுமில்லை. நீவிர் அன்னாரின் ஐஸ்வர்யப் பெருக்கையும் வாழ்க்கை முறைக்குரிய அழகிய தோற்றங்களையும் பகிரங்கமாய்க் காணப்படுகிற ஒருசில மினுக்கான ஆடம்பர தடபுடல்களையும் கண்ணுற்று, அவர்கள் அதிகமதிகம் சந்தோஷமுள்ளவர்களாயிருக்கின்றார்களென நினைக்கின்றீர்கள். நீங்கள், எவ்வளவு சந்தோஷத்துடன் அவர்கள் இருக்கின்றார்கள் என்பதை அன்னார் இருதயங்கள்பால் வினவுங்கள். உண்மையில் அவர்கள் இருதயங்களுக்குள் நெருப்பு ஜ்வாலையைப் போன்ற எண்ணங்களே வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றன; உதயமாகி மறைகின்றன. இதன் பயனாய் அவர்கள் நிம்மதியுடையவர்களாயில்லை. ஆண்டவனுக்கு விரோதமாய் நடந்து செல்லும் அவர்கள் இல்லங்களெல்லாம் நரக வேதனையாகவே இருந்து வருகின்றன. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் தற்கொலை என்னும் நோய் எத்துணை வேகமா யிருக்கிறதென்பதைப் பத்திரிகையைப் புரட்டிப் பாருங்கள். அவண், விவாக ரத்து என்பதும் எவ்வளவு மிகுந்திருக்கிறது என்பதையும் கவனியுங்கள். அன்னாரின் வம்சங்கள் எவ்வளவு கேவலமாய்க்கொண்டே செல்லுகின்றன வென்பதையும் நிதானித்துப் பாருங்கள். வெறுக்கத்தக்க வியாதிகள் அனேகம் மக்களின் வாழ்க்கையை எங்ஙனம் பாழ்ப்படுத்துகின்றன வென்பதையும் கவனியுங்கள். பல திறப்பட்ட மக்ளுககிடையே உணவுப் பஞ்சம் எத்துணை தூரம் வியாதியேபோல் பீடித்திருக்கிற தென்பதையும் பாருங்கள். பொறுமையும் கோபமும் விரோதமும் ஓர் இனத்தில் தோன்றிய மக்களிடையே எவ்வளவு சச்சரவுகளை உண்டுபண்ணி யிருக்கின்றன வென்பதையும் கவனித்துப் பாருங்கள். அழகிய வாழ்க்கை என்னும் வெளித்தோற்றம் மனிதர்களின் உண்மையான வாழ்க்கையையே அதிகம் கசப்பானதாய்ச் செய்து விட்டது. பார்ப்பதற்கு அதிக கம்பீரமாகவும் கவர்ச்சிக்குரியனவாகவும் விளங்கும் சுவர்க்

# நாளுக்கு நாள் விருத்தியடைந்து வருகிறது

## DAY BY DAY EXPANDS

26-வருஷத்தில் இந்திய தேயிலைத் தொழிலாளிகள், சுமார் 235 லக்ஷம் ரூபாய் விளம்பரத்திற்காகச் செலவழித் திருக்கின்றனர். இந்த வருஷங்களுக்குள் இந்தியாவில் 82 மில்லியன் பவுண்டு தேயிலை உபயோகம் அதிகரித்திருக்கிறது. 1915-ம் வருஷம் விளம்பரம் ஆரம்பித்ததிலிருந்து இது மும்மடங்கு பெருகி யிருக்கிறது என்று இந்தியாவில் தேயிலைப் பிரசாரத்தைப்பற்றி ரோட்டரி கிளப்பில் கூறுகையில் W. H. மைல்ஸ் என்பவர் பிரஸ்தாபித்தார்.

அவர் மேலும் கூறியதாவது:—இந்தியப் பிரசாரம் இரண்டு விதமானது. முதல் படலம் 1915-முதல் 1930-வரை. இரண்டாவது இன்று வரை. முதல் காலத்தில், உலர்ந்ததும், ஜலமானதுமான தேயிலையை எப்படி உண்டுபண்ணுவது, எப்பொழுது எவ்வளவு என்பதைப் பொது ஜனங்களுக்கு அறிவுறுத்தி வந்தார்கள். முதலில் பாமர ஜனங்களின் உபயோகத்திற்காகப் பல ரயில்வே ஸ்டேஷன்களில் தேயிலைக் கடைகள் வைத்தார்கள். இப்படி மிகக் கஷ்டப்பட்டுச் செய்து வந்ததில் இப்பொழுது எந்த ரயில்வே ஸ்டேஷனிலும் சுத்தமான திருப்திகரமான தேயிலை கிடைக்க ஹேதுவாயிருக்கிறது.

---

(250-ம் பக்கத் தொடர்)

கங்களைப்போன்ற அழகிய நகரங்களுக்குள், லக்ஷக்கணக்கான மக்கள் எவ்வளவு வெந்து வெதும்பி அழுது மடிகின்றனர் என்பதை யாரே விவரித்துக் கூறமுடியும்? அவர்கள் சந்தோஷமாகவும் சுகமாகவு மிருக்கின்றார்கள் என்பதன் பொருள் இதுதானா வென்பதை நீவிர் நிதானமாய்க் கவனித்துப் பார்த்தல் வேண்டும்.

எனவே சோதரீர், ஆண்டவன் வார்த்தை எப்பொழுதும் பொய்யாவதில்லை என்பது உங்கள் மனத்திலிருக்கட்டும். பரிசுத்த கலிமாவைத் தவிர்த்து வேறு வார்த்தையை ஏற்றுக்கொண்டவர்கள் அதன்படி நடந்து செல்லுகின்றவர்கள் இவ்வுலகத்தில் மட்டுமென்ன மறுவுலகத்திலும் மேன்மையையும் நன்மையையும் அடைய முடியாது. இவ்விஷயத்தை நீங்கள் ஆராயப்புகின் இதற்கு விரோதமாய் ஓர் அம்சத்தையும் அதற்கான பொருளையும் நீங்கள் கண்டுகொள்ள முடியவே முடியாது. இது உண்மை உண்மை உண்மை.

ஒவ்வொரு வீட்டிலும் தேயிலை பருகுவதின் அவசியத்தைக் கருதி ஆரம்பித்த முயற்சிதான் இரண்டாவது கால ஆரம்பம். இது பற்றி மைல்ஸ் கூறுகிறார். புது வழக்கத்துக்குக் கொண்டுவர, பாமர ஜனங்களுக்குத் தேயிலை இனாமாகக் குடிக்கக் கொடுப்பது காலணாப் பொட்டலமாக உலர்ந்த தேயிலை கொடுப்பது முதலானவற்றை ஆஸ்பதமாக வைத்துக்கொண்டு இரண்டாவது புது முறை ஆரம்பிக்கப்பட்டது.

இந்த போர்டாரின் இரண்டாவது முயற்சி பெரிய பட்டணங்களில் ஆரம்பிக்கப்பட்டது. ஏனெனில், இங்குத்தான் ஜனங்கள் சிறு சிறு வட்டாரங்களில் கூடியிருக்கிறார்கள். இதுவே பிரசாரத்திற்கு உகந்த இடமாகக் கருதப்பட்டது.

திரும்பவும் இலவசத் தேயிலை பானம், காலணாப் பொட்டலத் தேயிலைத் தூள் முதலியவற்றைக் கொண்டே வீடு வீடாகச் சென்று இந்த முயற்சி ஆரம்பிக்கப்பட்டது. இந்தப் பட்டணப் பிரசாரம் ஆரம்பித்ததும் மஹாயுத்தம் வந்தது. சீக்கிரத்தில் பெரிதாகி வரும் சைன்யத்திடையே இந்தப் பிரசாரம் மிகவும் உசிதமாகத் தெரியவந்தது. ஆனால் சைன்யங்களுக்கும் ஏ. ஆர். பி. தொழிலாளருக்கும் உபயோகத்தை உத்தேசித்து ஒரு தேயிலை தயாரிக்கும் மோட்டார் படை ஒன்று தயாரித்தோம்.

சைன்யங்களுக்கும் மற்றும் உள் நாட்டுப் பாதுகாப்புப் படைக்கும் தேயிலை கொடுத்துதவியது பிரசார உபயோகமட்டுமல்லாமல் யுத்த உதவி புரிவதற்கும் இடமாயிருந்தது.

---

கைத்தறி நெசவு செய்த சலவை, சாயத் துணிகளைக் கோட்டா அளவுக் குட்பட்டு இலங்கைக்கு அனுப்பி வைக்கலா மென்றும் இக் கோட்டா அளவும் முன்னைவிட இப்போது சற்று அதிகப் பட்டிருப்பதாகவும், கைத்தறி நெசவுத் துவாலைகள், படுக்கை விரிப்புகள் முதலியவற்றை இலங்கைக்கு அனுப்பக் கோட்டா நிர்ப்பந்தங்கள் தளர்த்தப்பட்டிருப்பதாகவும் முஸ்லிம் வர்த்தக சபைக்கு ஏற்றுமதி வர்த்தகக் கண்ட்ரோலரிட மிருந்து தகவல் கிடைத்திருப்பதாகத் தெரிகிறது.

---

கான்பகதூர் பைஜுர் ரஹ்மான் சென்னை போஸ்ட் மாஸ்டர் ஜெனரலாக நியமிக்கப்பட்டுள்ளார்.

# இந்தியாவைப்பற்றிய முக்கிய விஷயங்கள்
## (INTERESTING FACTS ABOUT INDIA)

இந்தியாவின் மொத்த ஜனத்தொகை 1941 மார்ச் 1-ந் தேதி முடிய எடுத்த கணக்கின்படி, 38,88,00,000 ஆகும்.

ஜனத்தொகையில் வங்காள மாகாணந் தான் முதல் ஸ்தானத்தில் வருகிறது. இந்தியாவின் மாகாணங்களுள் வங்காளத்தில் தான் ஜனத்தொகை அதிகம். வங்காளத்தின் ஜனத்தொகை 6,03,14,000 ஆகும்.

மத்திய மாகாணத்தில் தான் மரணவிகிதம் அதிகப்படியா யிருக்கிறது. அதாவது அங்கு 100-க்கு 33·5 விகிதம் மரணம் ஏற்படுகிறது.

அஸ்ஸாம் மாகாணத்தில்தான் மரண விகிதம் மிகவும் குறைவாகும். அங்கு 100-க்கு 23·8 தான் மரணவிகிதம்.

சென்னையில் ஆண்மக்களை விடப் பெண் மக்களே அதிகமா யிருக்கின்றனர். 1000 ஆண்களுக்கு 1030 பெண்கள் விகிதம் சென்னை மாகாணத்திலுளர்.

பஞ்சாபில் பெண்மக்கள் தொகை மிகவும் குறைவாக இருக்கிறது. அதாவது 1000 ஆண்களுக்கு 831 பெண்கள் தாமிருக்கின்றனர்.

வங்காளத்தில் தான் விதவைகளின் தொகை அதிகமாயிருக்கிறது. அங்கு, 1000 பெண்களுக்கு 226 பேர் விதவைகளாகவே இருக்கின்றனர்.

அஜ்மீர்—மீர்வாராவில் குருடர்களின் தொகை அதிகமாயிருக்கிறது. அங்கு ஓரி லக்ஷம் பேருள் 383 பேர் குருடர்களாகவே இருக்கின்றனர்.

இந்தியாவிலேயே முதன் முதலாக முனிசிபாலிட்டி ஏற்படுத்தப் பட்டது அஹ்மதாபாதில்தானும். அங்கு 1834-ஆவது ஆண்டிலேயே முனிசிபாலிட்டி ஏற்படுத்தப்பட்டு விட்டது.

கல்வியறிவு படைத்தோர் அதிகமாக உள்ள மாகாணம் வங்காளம் தான். அங்கு 97,20,000 பேர் கல்வி அறிவு உடையவர்களாக இருக்கின்றனர். அதற் கடுத்தபடியாகக் கல்வியறிவு மிக்கோர் உள்ள மாகாணம் சென்னை ஆகும். இங்கு 64,20,000 பேர் கல்வி அறிவுடையவர்கள் ஆவர்.

ஜாக்கோபாபாதில் வெயிற் காலத்தில் 125 டிக்ரீ சூடெழுமாறு வெயில் காயும். குளிர் காலத்தில் 25 டிக்ரீக்கும் குறைந்து, தண்ணீர் உறையுமாறு குளிரும்.

உலகில் உறபத்தியாகும் தங்கத்தில் 100-க்கு 3 விகிதம் இந்தியாவில் உற்பத்தியாகிறது.

இந்திய மக்களுள் 100-க்கு 11 பேர் விகிதமே நகரங்களில் வசிக்கின்றனர். 100-க்கு 89 பேர் கிராமங்களில் வாழ்வதைத் தான் விரும்புகின்றனர்.

உலகில் அதிக பஞ்சு உற்பத்தியாகும் நாடுகளுள் இந்தியா இரண்டாவதாக இருக்கிறது.

உலகிலுள்ள கல்வியறிவில்லா மக்களுள் மூன்றில் ஒரு பாகத்தினர் இந்தியாவிலேயே இருக்கின்றனர்.

இந்தியாவில் சராசரிக் கணக்கெடுத்துப் பார்த்தால் யூதர்களுக்குத்தான் அதிக குழந்தைகள் பிறந்திருக்கின்றன. ஒவ்வொரு யூத குடும்பத்திலும் 6 குழந்தைகள் விகிதம் இருக்கின்றன.

இந்தியாவிலுள்ள கிறிஸ்தவக் குடும்பங்கள் மற்றைச் சமய மக்களின் குடும்பங்களை விடப் பெரிதாயிருக்கின்றன. ஒவ்வொரு கிறிஸ்துவக் குடும்பத்திலும் சராசரி 5 பேருக்கு மேலிருக்கின்றனர்.

உலகிலேயே அதிக மழை பொழியும் இடம் அஸ்ஸாமிலுள்ள சிராபுஞ்சி என்னுமிடந்தான். இங்கு வருடத்தில் 460 அங்குல மழை பொழிகிறது. ஆனால் சிந்து மாகாணத்திலோ வருடத்தில் 3 அங்குல மழைதான் பொழிகிறது.

உலகத்திலேயே இந்தியாவில்தான் மரண விகிதமும், ஜனன விகிதமும் அதிகம்.



# உலக ரட்சகரின் உதயாகமம்

(ஜனாப் H. M. S. அப்துல் காதிர் ஷாதிலீ, காரைக்கால்)

## இறைவன் வணக்கம்

திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த
மருவினு மருவா யணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொலி யனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்த பல்லுயிரின்
கருவினுங் கருவாய்ப் பெருந்தவம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே

(உரை) மேன்மையிலும் மேன்மையாய், உண்மையிலும் உண்மையாய், அறிவிலும் அறிவாய்ச் சிறப்பினையுடைய பரிமளத்திலும் பரிமளமாய்ப், பரமாணுவுக்கும் பரமாணுவாய்க் கணிக்கக்கூடாத பெரிய பிரகாச முழுவதும் ஒப்பிலும் ஒப்பாய் உருவிலும் உருவாய்ப் பூமியினிடத்துத் தங்கிய பல ஜீவராசிகளின் கருவினுங் கருவாய்ப் பெரிய உலகத்தை ஆட்சி செய்கின்ற கர்த்தாவாகிய அல்லாஹு ஜல்ல ஷானுஹுவத்த ஆலாவை ஹிருதயத்தின்கண் பொருந்தச் செய்வது கருத்தாகும்.

சிறந்தமெய்ப் பொருளை யழிவிலா மணியைத்
தெரிந்து முக்காலமு முணர்ந்து
துறந்த வரிதயா சனத்திருந் தவனைத்
துடரின்ப துன்ப மற்றவனைப்
பிறந்த பல்லுயிரின் மனத்தள வுறைந்து
பிறப்பிறப் பென்றில்லா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையு மறந்து
மண்ணினின் மதி மறந்தவரே

(உரை) சிறப்பினையுடைய சத்தியத்துவத்தைக் கெடுதலற்ற இரத்தினத்தை, யாவற்றையும் பார்த்து வருங்காலம் நிகழ்காலம் செல்காலமென்னும் மூன்று காலங்களையுமறிந்து, இவ்வுலகாசையை நீத்தோர்களின் மனமாகிய தவிசினிடத்து தங்கினவனைப் பின்பற்று நிற்கும் சுகமும் துக்கமும் இல்லாதவனை, அவதரித்த பல ஜீவராசிகளின் அகத்தினளவு தங்கி எக்காலமும் தோற்றமும் நாசமு மற்றவனை, மறந்தவர்கள் சுவர்க்க லோகத்தையு மறந்து பூமியின்கண் அறிவையு மறந்தவர்களாவர்.

கோதறப் பழுத்து மதுரமே கனிந்த
கொவ்வைவா யரம்பையர் வாழ்த்தித்
தீதற நெருங்கி யேவல்செய் திருப்பச்
செழுங்கம லாசனத் திருந்த
மாதருக் கரசி யாமினு வுதர
மனையிடத் திருந்துமா நிலத்தி
லாதரம் பெருக நல்வழிப் பொருளா
யகுமது தோற்றின ரன்றே.

(உரை) குற்றமென்பதே யுறாது கனிந்து இன்பமானது புதைதலாகிய கொவ்வைக் கனி போலுஞ் சிவந்த வாயினையுடைய ஹூறுலீன்கள் துதித்து எதுமோரிடைதலுமின்றிச் செறிந்து எவற்றொழிலை யெல்லாம் முடித்து இன்னு முளவாம் ஏவல் நோக்கி நிற்கவும், செழிய தாமரைப் பொகுட்டின்கண் வீற்றிருந்த சீதேவிகளுக்கும் நாயகமாகிய ஆமினா அவர்களின் அடங்காப் புகழ்க்குரிய கருப்ப மாகிய வீட்டினின்று மாட்சிமை தங்கிய இப் பெரிய பூமியிலும் தமது அன்பானது இடையறாது பெருகாநிற்கும் உபகாரமாகிய பாதைக்குரிய வஸ்துவாய் அஹ்மது எனும் அட்சரவடிவாய் வந்த முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் இவ்வள வெனப்படாது விரிந்த புதுமையுடைய சந்திரன்களது சோதியாய் வாராநின்ற ஒப்பற்ற மாட்சிமை தங்கிய கிரணங்களுடைய அழகிய நிலவு போன்ற திருமேனியையும் கிருபையானது குடியிருக்கும்படியான செம்மையாகிய தாமரை மலர்போலும் உபய நோக்கங்களையு முடையராய் எம்பெருமானார்(ஸல்) அவர்கள் உதயமானார்கள் என்பதாம். (ஸலவாத்துல்லாஹி அலைஹி)

கிடந்தொளி பரப்பி வாசங்கோப் பலித்துக்
கிளர்கிபு லாவைமுன் னோக்கி
யிடங்கொளந் தரநேர் சிரசினை யுயர்த்தி
யெழில்பெறச் சுஜூதுசெய் தினைத்தாட்
டிடன்பெற மடித்துக் குறியிடக் கையாற்
சேர்த்தொளிர் வலக்கைகான் மேல்வைத்
துடனணிக் கலிமா விரலினை யுயர்த்தி
யுதித்தனர் முஹம்மது நபியே.

(உரை) இருந்தபடியிருந்து பிரகாசத்தைப் பரவச் செய்தும் பலவகை நறு நாற்றங்களைத் தேகமானது உமிழா நிற்கவும் உயர்தலாகிய தேவசந்நிதியான கஃபாவின் திசையளவில் பார்த்தும் பெருமையமைதலாகிய ஆகாயத்தளவில் தகுதி பூண்ட தலையை அதிகப்படுத்தியும் உபய பாதங்களை உறுதிப்பட மடக்கியும் நிமித்தப் பொருளாகிய வஸ்துவைப் புகழ்க் குரிய இடது கையால் அணைத்தும் பிரகாசிக்கின்ற வெற்றிக்குரிய வலது கரத்தை வலது காலின் மேலே வைத்தும் அத்துடன் அழகிய மந்திரத்திற் குரிய விரலினை உயரப் பண்ணியும் முறை வழாது அழகாய்ச் சாஷ்டாங்கஞ் செய்து முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள் உதய மாயினார்கள் என்பதாம்.

சிரசினி னெய்தோய்ந் திருவிழிக் கருமை
சிறந்திடக் கொப்பூழுங் கொயளாய்
மருவுசுன் னத்துஞ் செய்யளாய்த் துடக்கின்
வருங்குறி யொன்றுமி லாதாய்ப்

பரவுகஸ் தூரி மனையேலா நிறைந்த
பரிமளங் கமகம கமென
பெருகிய வொளிவு வானமட் டுலவப்
பிறந்தனர் முஹம்மது நபியே.

(உரை) தகுதிபூண்ட சென்னியானது நறு நெய்யினால் நனைக்கப் பட்டும், உபய நோக்கங்கள் சுறுமாவால் சிறக்கப்பட்டும், நாபியான தறுக்கப்பட்டும், பொருந்துமாறு விருத்தசேதனமுஞ் செய்யப்பட்டும், பிள்ளைப் பேற்றால் நிகழுந் துடக்கு களினடையாளங்கள் ஏதுமில்லாமையாயும், மிருமணத்தின் பூரணப்பட்டுள்ள திருமேனியால் உமிழுண்ட மான்மதமானது மக்காபுரத்துள்ள எல்லா மனைகளிலும் பரவுதலாய் இன்னபடியென மதித்தற்கரியதாய்ப் பரிமளிக்கவும், இவ்வளவெனப்படாது பெருகுதலாகிய பிரகாசமானது வானலோகம் வரையும் பிரகாசியா நிற்கவும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஆண்டவரவர்கள் உதயமாயினர்கள் என்பதாம்.

செம்மையங் கோட்டுக் கடகரிக் கலகந்
தீர்ந்தபி னைம்பதா நாளி
லம்மதி மாசத் தொகையினில் றபீயு
லவ்வலிற் பனிரண்டாந் தேதி
யெம்மனைக் கும்பே றெனவரும் பொருளா
யிசைந்திடுந் திங்களி ரவின்
மும்மையென் றுரைக்கும் புவனமும் புரக்க
முஹம்மது நபிபிறந் தனரே.

(உரை) சிவந்த கொம்பினையும் மதத்தினையுமுடைய யானைகளாலுறும் தியக்கமானது ஒழிந்த பின்னர் ஐம்பதாந் தினத்தில் அழகிய சந்திரனது பன்னிரண்டு மாதங்களில் றபீயுலவ்வல் மாதத்தின் ஆண்டுப் பன்னிரண்டாம் நாளாகிய புகழும்படியான திங்கட்கிழமை இரவிலே எல்லாரது வீட்டிற்கும் வரப்பிரதாபமென்று வரும் வஸ்துவாகியும் மூன்றாயிருக்குந் தன்மையினவென்று சொல்லப்படும் உலகங்களையெல்லாம் இரட்சிப்பதற்காகவும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள் உதயமாயினர்கள் என்பதாம்.

பூதலத் தரசு பதியென வுதித்த
புகழ்பெறு மக்கமா நகரிற்
சீதவொண் கதிர்சேர் கஃபத்துல் லாவின்
றிசையினில் வடக்கிழக் காக
வேதமோன் றனுகாச் செமுறத்து லுஸ்தா
வெனுமொரு தலத்தி னடுவே
மாதவ ரபித்தா லிபுதரு மனையின்
முஹம்மது நபிபிறந் தனரே.

(உரை) பூலோகத்திற்குத் தலைநகரமெனும் மக்கா வென்கிற மாட்சிமை தங்கிய பட்டணத்தில் குளிர்ச்சி பொருந்திய அழகிய கிரணங்களடை கிடக்கும் அல்லாஹ்வுடைய வீடென்கிற சந்நிதியின் திக்குகளில் வடக்கின் கீழ்ப்புறமாக விருக்கும் குற்ற மெனப்பட்ட ஒன்றும் நெருங்காத ஒப்பற்ற ஜமுறத்து லுஸ்தாவென்று சொல்லப்பட்ட மாசிறப்புற்ற விடத்தின் நாப்பணில் விளங்கும் பெரிய தவத்தினையுடைய அபித்தாலிபு என்பவர்களினது தெய்விகத்துவ வீட்டின் கண் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுதயமானர்கள் என்பதாம்.

நெறிநிலை திரியா மருண்மத மிருந்து
நெடுநில மெங்கணும் பரந்து
துறவறந் தவறி யில்லற மடிந்து
சுடரிலா மனையது போலக்
குறைபடுங் கால மிருளெனுங் குபிரின்
குலமறுத் தறநெறி விளக்க
மறுவிலா தெழுந்த முழுமதி போல
முஹம்மது நபிபிறந் தனரே.

(உரை) சன்மார்க்கத்தின் முறைமைகள் நடைபெறாது மௌட்டிய மயக்கத்தின் வெறியானது அதிகரித்து எல்லா விடத்திலும் விரிந்து மெய்ஞ்ஞான வழிகளைப் பிழைத்தும் உலகப் பேற்றிலேயே அழிவுற்றும் வெளிச்ச மில்லாது பாழாகிய மாளிகையை யொப்பப் பெரிய பூமியானது பழிப்புற்றிருக்குங் காலத்திலேயே இருள்போலும் மௌட்டிய வெறிகொண்ட குபிரர்களின் கூட்டத்தை அறச் செய்து தரும நூலையும் மெய்ஞ்ஞான வழிகளையும் காட்டுவிப்பான் வேண்டிக் களங்கமில்லாது உதயமாகிய பூரணப்பட்ட சந்திரனைப் போல முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள் உதயமாயினர்கள் என்பதாம்.

பானுவின் கதிரா லிடருறுங் காலம்
படர்தரு தருநிழ லெனலா
யீனமுங் கொலையும் விளைத்திடும் பவநோ
யிடர்தவிர்த் திடுமரு மருந்தாய்த்
தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய்க்
குறைஷியின் றிலதமே யெனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முஹம்மது நபிபிறந் தனரே.

(உரை) சூரியனது வெப்பத்தினாலே சீவசாதிகள் துன்புறா நிற்கும் காலத்திலே திடீரென முளைத்துப் படரா நிற்கும் மரத்தினது நிழல்போலாகியும் இழிய தொழிலும் கொலைத் தொழிலும் உண்டு படுத்தும்படியான பாதகமாகிய பிணியினது ஆபத்தை விலக்கு மென்னத் தக்க அரிதாகிய அமிர்தமாகியும் குறைஷி வம்மிஷத்தார்களின் நெற்றிகளுக்கெல்லாம் ஒரு திலகம் போலாகியும் தீன் என்று சொல்லும் சன்மார்க்கமாகிய புல்லுக்கு ஒப்பற்ற செழிய மழைபோலாகியும் பெரிய பூமிக்குத் தெரிந்த நன்மை பயக்கும் தீபம் போலாகியும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள் உதயமானர்கள் என்பதாம்.

செங்கதிர் பரப்பி புலகெலாம் விளக்கித்
திரிதின கரனும்வெண் ணமுதந்
தங்கிய கிரணச் சசியுமந் தரத்திற்
றவழ்தரு முடுக்குல மனைத்தும்

# கலம்பகம் News & Notes.

கடந்த மார்ச் 8-ந்தேதி இரவு திருவனந்தபுரம் எக்ஸ்பிரசில் தேவக்கோட்டை பாங்கர் திரு. லக்ஷ்மணன் செட்டியார் கொல்லப்பட்டதுபற்றி வேலு என்பவனைப் பொலீஸார் சேலம் ரத்னகிரியில் கைதுசெய்தனர். செட்டியாருக்குச் சொந்தமான நோட்கள் சில இவனிட மிருந்தனவாம். இவனைப் பொலீஸார் ஏற்கெனவே சில திருட்டுக் குற்றங்களுக்காகத் தேடிக்கொண்டிருந்தனராம்.

---

அகில இந்திய சமஸ்தான முஸ்லிம் லீக் தலைவர் நவ்வாப் பகதூர் யார் ஜங் சமஸ்தானத்துக்குள்ளோ வெளியிலோ கூட்டங்களில் பேசக்கூடாதென்றும் அவைபற்றிப் பத்திரிகைகளுக்குச் செய்தி அனுப்பக்கூடாதென்றும் நிஜாம் ஸர்க்கார் தடைவிதித்திருந்தனர். இதனால் இவர் தமது ஜாகீர்தார் பட்டத்தையும் பிற பட்டங்களையும் வேண்டாமென்று உதறி அதிகாரிகளுக்குத் தம் கருத்தை அறிவித்து விட்டார்.

---

சென்னை ஸர்க்கார் எடுத்துக் கொண்ட தீவிர முயற்சியின் காரணமாக 1938-39ல் உணவுக்குரிய தானியங்கள் விளைந்த நிலங்களைவிட 1941-42ல் சராசரி 10 லக்ஷம் அதிகப் படியான நிலங்கள் பயிர் விளைவனவாக ஆக்கப் பட்டிருக்கின்றன. அதாவது சாதாரண காலத்தைவிட 5 லக்ஷம் அதிக ஏக்கர்களில் பயிர் விளைந்திருக்கிறது. 1941-42ல் மொத்தம் 2 கோடியே 80 லக்ஷம் ஏக்கர் நிலங்களில் பயிர் விளைந்திருக்கிறது.

---

(254-ம் பக்கத் தொடர்)

பொங்கொளி யெவையுஞ் சுவனநா டனைத்தும்
பூதலம் விசும்புமற் றனவு
மிங்கெழின் முஹம்ம தொளியினி லென்று
விவர்க்கெவை யுவமை சொல்லுவதே.

(உ) சிவந்த கிரணங்களைப் பரவச் செய்து உலக முழுவதையும் பிரகாசத்தால் தீட்டி ஆகாயத்தின்கண் உலாவா நிற்குஞ் சூரியனும், வெள்ளிய பெருமை பொருந்திய கலைகளையுடைய சந்திரனும் நகரும்படியான நட்சத்திரக் கூட்டங்க ளியாவற்றும் பொலிவாகிய பிரகாசங்களனைத்தும் சுவர்க்கலோகங்களும் வானலோகங்களும் பூலோகங்களும் அவற்றில் வாழுமிடங்களும் பிறவாகுவனவும் பெருமை பொருந்திய எங்க ணாயகமாகிய முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஆண்டவரவர்களின் பிரகாசத்தினாலே பெறப்பட்டன வென்று சொல்லுகையால் இவ்விடத்தில் இந் நாயகரவர்கட்கு உவமமாக யாம் சொல்லப் புகுவது யாவுள? (ஒன்றுமில்லை) என்பதாம்.

ஜெர்மானியரின் போர் முயற்சியைக் குலைப்பதற்காக இரண்டாவது போர் முனை ஏற்படுத்த நேச நாட்டினர் செய்துவரும் முயற்சி சமீபித்து விட்ட தென்றும் விரைவில் 2-வது போர் முனை ஏற்பட்டு விடுமென்றும் அமெரிக்காவின் பொக்கிஷ மந்திரி ஹென்ரீ மார்கென்தாவ் அறிவிக்கிறார்.

---

பம்பாய் மாகாணத்திலிருந்து தேயிலையை லைசென்ஸ் அனுமதி பெறாமல் வெளியிடங்களுக்கு எடுத்துச் செல்லக் கூடாதென்று பம்பாய் ஸர்க்கார் தடையுத்தரவு பிறப்பித்து விட்டது.

---

பாக்கிஸ்தான் பிரச்னையைப் பற்றி ஆலோசிப்பதற்காகப் பஞ்சாப் ஊஜீஆ மகாநாட்டின் காரியக் கமிட்டி ஜூன் மாதத்தில் ஒரு விசேஷ மகாநாடு கூட்டுவதென்று தீர்மானித்திருக்கிறது.

---

நிஜாம் இளவரசர் வடமேற்கு எல்லைப் புறத்தில் சுற்றுப்பிரயாணம் செய்தார். பிஷாவர் சென்று இஸ்லாமியா காலேஜைப் பார்வையிட்டார். முஹம்மதிய சமூக மக்கள் வாழும் பிரதேச எல்லைக்குச் சென்றபோது, அச்சமூக மாலிக்குகள் இவருக்கு உபசாரங்கள் செய்தனர்.

---

டும்லுக் என்னுமிடத்தில் கடந்த வெள்ளிக்கிழமையன்று 1,000 மணங்கு நெல்லையும் 6-மூட்டை அரிசியையும் 2,000 மக்கள் சேர்ந்த ஒரு கும்பல் கொள்ளையிட்டு விட்டதென்று தெரிகிறது.

---

7-ந்தேதி முதல் 10-ந்தேதி வரை ஹிட்லரின் தலைமைக் காரியாலயத்தில் ஹிட்லரும் முஸோலினியும் சந்தித்து, யுத்த இராணுவ நிலைமைகளைப்பற்றிக் கலந்தாலோசித்தார்கள். யுத்தம் தொடங்கியபின் இவ்விருவரும் இப்போது பேசியது 7-வது முறையாகும். மொத்தம் இவ்விருவரும் 12-முறை சந்தித்துக் கலந்து பேசி யிருக்கின்றனர். இவர்கள் இதற்கு முன்னர்ச் சந்தித்தது 1942 ஏப்ரில் 28—30-ந் தேதிகளில்.

மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் மனைவியார் பேகம் ஆஜாத் 9-ந் தேதி காலை 6-மணிக்கு உயிர் துறந்தார். இவருடைய மையித் மாணிக்தோலா மேமன் இடு காட்டில் நல்லடக்கம் செய்யப்பட்டது. இவருக்கு வயது 45. கடந்த 2-ஆண்டுகளாக இவர் க்ஷயரோகத்தால் துன்புற்று வந்தார். இவர் ஆன்மா சாந்தி பெறுக.

---

மன்சூர் தாவூத் என்பவர் எகிப்திய அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். இவருக்கு எகிப்திய இளவரசர் என்னும் பட்டமும்தரப்பட்டிருந்தது. இவர் பிப்ரவரி மாத மத்தியில் தம் உறவினரைப்பார்க்கத் துருக்கி சென்று பின் அங்கிருந்து இத்தாலி சென்று, ரோம் ரேடியோமூலம் அரபியில் பிரிட்டிஷாருக்கு எதிரான பிரசாரம் செய்தார். இதற்காக எகிப்து மன்னர் பாரூக், மன்சூர் தாவூதை அரச குடும்பத்திலிருந்து நீக்கியதுடன் அவருக்களிக்கப்பட்டிருந்த பட்டத்தையும் பறிமுதல் செய்துவிட்டார்.

---

பிரிட்டன் யுத்தத்திற்காகத் தினசரி $1\frac{1}{2}$ கோடி பவுன் செலவிடுகிறது. 1940-ல் தினசரி 50-லக்ஷம் பவுன்தான் செலவாயிற்று. 1942-ல் 1,25,00,000 பவுன்செலவாயிற்று.

---

ஜனுப் ஜின்னுஹ் அவர்கள், தெஹ்லியில் அகில இந்திய முஸ்லிம் லீக் மகாநாடு நடைபெற்று முடிந்தவுடன் காஷ்மீர் சென்று அங்குச் சில வாரங்க்ள்வரை தங்குவார். காஷ்மீர் போகும்போது வழியில் லாஹூரில் 3 நாட்கள் தங்கி பஞ்சாப் முஸ்லிம் லீக் தலைவர்களைச் சந்தித்துப் பேசுவார்.

---

பஞ்சாப் - சீக்கியர்களின் தலைவர் திரு. கியானி கர்தார் சிங் எம் எல். ஏ. 14-ந் தேதி ஜனுப் ஜின்னுஹ்வைச் சந்தித்து ஒரு மணி நேரம்வரை, பாக்கிஸ்தான் ஆட்சி ஏற்பட்டால் பஞ்சாபிலுள்ள சீக்கியர் நிலை எவ்வாறிருக்கும் என்பது குறித்துப் பேசி ஒரு முடிவுக்கு வந்துள்ளார்.

---

கல்கத்தா இஸ்லாமியா காலேஜ் ஸ்தாபகர் தினம் 12-4-43ல், லண்டனில் இந்திய ஹைகமிஷனராயுள்ள ஸர் அஜீஜுல் ஹக் தலைமையில் கல்கத்தாவில் நடந்தது. அதில் மாஜி பிரதம மந்திரி மௌலவீ பஜ்லுல் ஹக் பேசுகையில் வங்காளத்தில் மிக விரைவில் முஸ்லிம் பல்கலைக் கழகம் ஒன்று ஏற்படுத்தப்படும் என்னும் விவரத்தை அறிவித்தார்.

